ஸ்ரீ ராமகதா தியாகராஜன் வெள்ளிவிழா வெளியீடு!

# ஸ்ரீராமகதாசாகரம்

# ஸ்ரீ சுந்தர காண்டம்

(கவியோகி - மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள் முகவுரையுடன்)

கோவை
ஸ்ரீராமகதாரத்ன வி. தியாகராஜன்
எழுதியது

வெளியீடு
ஸ்ரீ ராமகதா நிலையம்
புதுக்கோட்டை-2
1964.

## சமர்ப்பணம்

உத்தமர் எவரையாவது மனத்திலே குருவாக எண்ணி வணங்கினுல் வித்தை வரும் என்பர் பெரியோர். மகாவித்வான் திரிசிரபுரம் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் தமக்குத் தமிழில் ஏதாவது சந்தேகமிருந்தால் ஸ்ரீ கச்சியப்ப முனிவரை தியானித்தால் அவருடைய சந்தேகம் தெளிந்துவிடும் என்று தமிழ்த்தாத்தா அவர்கள் எழுதியுள்ள ஸ்ரீ பிள்ளையவர்களின் சரித்திரம் கூறுகிறது. இன்றும் மனத்தினுல் நினைத்தால் நமக்கு அருள் புரியும் பெரியோர்கள் உள்ளனர். அவ்வாறு என் நெஞ்சில் நீங்காது நிலைபெற்று, என்னையும் என் குடும்பத்தையும் சென்ற 50 வருடங்களுக்கு மேலாக ஆசி கூறி ஆதரவு காட்டுபவரும், தமிழ், ஆங்கில, வடமொழிப் புலமையும், முக்கியமாகக் கம்பனில் என் போன்றவரை ஈடுபடச் செய்யுமாறு சொல்மாரி பொழிபவரும், உத்தம பக்த சிகாமணியும், எனது குருநாதரும், மதுரை பிரபல வக்கீலுமாகிய உயர்திரு **N. R. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் B. A., B. L,** அவர்கட்கு இச்சிறிய புத்தகத்தை என் அன்புக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கிறேன்.

*கம்பனெனும் பெரும் புலவன் கவிதையெனும் கடல்*
*[பொழிந்த கரியமேகம்*
*உம்பருவந்திட அமுதம் உதவு பிரான் திருவடியே*
*[உவந்த அன்பன்*
*செம்பதும நாயகியாள் அருள் படைத்த மன்ருடி*
*[சிறந்த செம்மல்*
*எம்புலமை வளர்க என அருள் கிருஷ்ணசாமி கழல்*
*[இறைஞ்சுவோமே*

ஸ்ரீ ராமகதாரத்ன V தியாகராஜன்

உ
ஸ்ரீராமஜெயம்

# ஸ்ரீ ராமகதா சாகரம்

[சுந்தரகாண்டம்]





கோவை ஸ்ரீ ராமகதா ரத்னம்—கம்பர் கவி முழக்கம்–கம்பன் வல்லான்–கம்பன் கவிச்சந்தமேகம்—கம்பன் கதிரொளி—கம்பன் கவிச்செல்வன்–கம்பன் அபிநவகாளமேகம் — கம்பராமாயண ஜோதி — முத்தமிழ் வித்தகர்—கம்பகலைமணி

**V. தியாகராஜன் அவர்கள் எழுதியது.**

—: வெளியீடு :—

**ஸ்ரீ ராமகதா நிலையம்,**
6197/2, பெரியதெரு.
திருக்கோகர்ணம், — புதுக்கோட்டை-2
(திருச்சி Dt.)

**1964**

# முகவுரை

[கவியோகி மகரிஷி **ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்** அவர்கள், சென்னை]

*எல்லையில் அழகையெல்லாம் இனிதுற முகந்து; நல்ல*
*சொல்லமுதுடனே ஆழ்ந்த சுவைதரும் பொருளும் கூட்டி*
*கல்வியிற் பெரிய கம்பன் கற்பகக் கவிதை தந்து*
*பல்கலையுலகு போற்றும் பரிதிபோல் விளங்கினானே!*

*தன்னிகரில்லாக் கம்பன் தமிழினைச் சுவைக்கும்போது*
*பொன்முடிசூடி எந்தாய் புகழ்முடி பொலியக் காண்போம்!*
*பன்னெடுங்கலைகளெல்லாம் பைந்தமிழ் பயிலக்காண்போம்!*
*இன்னுயிர் அமுதமூறி இன்புறக் காண்போமன்றே.*

*கொட்டுங்கள் முரசம்! வெற்றிக்கொடிகளைப் புகழின் வானம்*
*எட்டிட உயர்த்திடுங்கள்! இணையிலா நமது கம்பன்*
*கட்டினான் கவிதைக் கோயில் கனிதமிழ்க் கலைகள் வாழ*
*மட்டிலா மகிழ்ச்சிகொண்டு மங்கல விழாக்கள் காண்போம்!*

உலக இலக்கியங்களில் கம்பராமாயணம் தனிச் சிறப்புடையது. சில ஆண்டுகளுக்கு முன் நான் ரஷ்யாவின் இலக்கியச் சங்கத்தில் ''உலகக் கவிகள்'' எனும் பொருள் பற்றிப் பேசினேன். ஓமரின் இலியதையும் கம்பனின் ராமாயணத்தையும் பற்றிப் பேசினேன். இராமாயணம் ரஷ்ய பாஷையில் வெளிவந்துள்ளது. இராமாயணக் கதை ர[illegible]யப் புலவருக்கு மகிழ்ச்சியூட்டியது. அதிலும் சுந்த[illegible]ண்டக் காட்சிகள் அவர்கள் உள்ளத்தைத் தொட்டன. நள்ளிரவில் அசோகவனத்தில் சீதை இராமனையே நினைந்து நினைந்து சோகச் சித்திரமாயிருக்கிறாள். அரக்கியர் நடுவே புலி சுற்றிய மான் போல் திகைத்திருக்கும் அவளுக்குக் காவல் கற்புக் கனலே.

*மாசுண்டமணியனுள் வயங்கு வெங்கதிர்த்*
*தேசுண்ட திங்களுமென்னத் தேய்ந்துளாள்*
*காசுண்ட கூந்தலாள்; கற்பும் காவலும்*
*ஏசுண்ட தில்லையால் அறத்திற் கீறுண்டோ?*

இந்தக் கற்புக்கனலை இராவணன் காம விழியாற்கண்டு, தன் ஆசையை முறையிடுகிறான். தான்மலையை எடுத்தது, திசை யானைகளை வென்றது, மூவுலகையும் ஆளுவது, எல்லாம் வரிசையாகச் சொல்லுகிறான்.

*தேவர் தேவியர் சேவடிகைதொழும்*
*தாவின் மூவுலகின் தனிநாயகம்*
*மேவு கின்றது நுன் கண்; விலக்கினை*
*யாவர் ஏழையர் நின்னின் இலங்கிழாய்!*

என்று உளங்கவரப் பேசும் இராவணன் முன் ஒரு துரும்பையெறிந்து அதைப் பார்த்துச் சீதை பேசுகிறாள்.

*விண்ணொட்டப் புகழ்ந்து தன்னை வேட்கை கொண்டிறைஞ்சு [வானை*
*கண்ணொட்டக்காணாள்; பின்னேகதுமெனத்திரும்பிக் கையால்*
*மண்ணொட்டுந்துரும்பெடுத்து வீசித்தன் மனத்தில் வேகும்*
*புண்ணொட்டும் சொல்லைச் சொல்லிப்''போ'' என்றாள் [புனிதசக்தி.*

இராவணன் சீதையைக் கண்டு ''என்னை யாரென்று நினைத்தாய்! அணங்கே! இணங்கு! என் அரசியாய் இலங்கு'' என்கிறான். சீதை,

*''சிரியவல்ல சொல்லித்தலைபத்தும் சிந்துவாயோ''*

என்று தாக்குகிறாள்.

இந்தக் காட்சியை அப்படியே நான் நடித்துக்காட்டும் போது சபையிலுள்ள ரசிகர் வியந்து நயந்து சட சடவென்று கைதட்டி மகிழ்ந்தனர்.

* * *

சுந்தரகாண்டத்தில் எத்தனையோ நயங்களுண்டு. அவற்றைத் தேர்ந்தெடுத்து நிரல்பட வைத்து இந் நூலைத் தொகுத்துள்ளார் நமது "கம்பக்கலைவாணர்." பையற் பருவத்தில் எனது தமிழாசிரியர் தெய்வசிகாமணி யோகியுடன் நாட்டரசன்கோட்டைக் கம்பர் சமாதியில் கம்பராமாயணம் படித்தேன். பிற்காலம் என் உயிர்த்தோழர் வீரவிளக்கு வ. வே. சு. ஐயருடன் இருமுறை கம்பனை ஓதி கம்பக் கவியின்பம் யாத்தேன். ஓமர், தாந்தே, மில்டனுக்கு இணையான ஒரே இந்தியக்காவியம் கம்பனே. கவிதை என்றால் கம்பன். கம்பன் வாக்கில் ஊறித்திளைத்துச் சுவையேறியே "பாரதசக்தி மகாகாவியம்" செய்தேன். கம்ப ராமாயணத்தைப் பலமுறை பல புலவர் விளக்கஞ் சொல்லக் கேட்டிருக்கிறேன். நானும் கம்பச் சொற் பொழிவாற்றியிருக்கிறேன். எனினும் நமது தியாக ராசன் சொல்லும் கம்பராமாயண இசைப்பொழிவில் தனிச் சுவையுள்ளது. அவருக்கு "கம்பக் கலைமணி" என்ற பட்டமும் அளித்துள்ளேன். என் உள்ளத்தைத் தொட்ட உரையாளர் தியாக ராஜரே.

* * *

இவர் 1927ம் ஆண்டு பிறந்தவர். தந்தை வேங்கட கிருஷ்ண ஐயர். கோயம்புத்தூர் வாசி. தாய் தருமாம்

பாள். இவர் அரிதகோத்திர அரிய அந்தணர். அந்த ணருக்கு உரிய ஒழுக்கங்களை தவருது செய்பவர். இவர் ஐந்து வயதில் தந்தையை இழந்து மதுரையில் தாய் வீட்டில் வளர்ந்தவர். மதுரைக் கல்லூரி மாணவர். இவருக்கு ஆங்கிலம் நன்ருக வரும், சம்ஸ்கிருதமும் வரும், எனினும் தமிழில் அளவற்ற ஆர்வம் கொண்ட வர், தக்க புலவரிடம் கம்பராமாயணம், திருவிளையாடற் புராணம் இரண்டையும் பாடங் கேட்டவர். கந்தரனு பூதிப் பாராயணம் செய்பவர்: முருக பக்தர் இவர். 1939ம் ஸூ தனது பன்னிரண்டாவது வயதில் இசை நயத்துடன் கம்பராமாயணப் பிரசங்கம் செய்யத் தொடங்கினர். இதுகாறும் இவர் 188 பட்டாபிஷேகங் களை முடித்துள்ளார். அதேபோல கந்தர் அநுபூதியை யும் திருவிளையாடற் புராணத்தையும் பலமுறை விளக் கம் செய்துள்ளார். தமிழ் இலக்கியச் சுவையில் இவர் தம்மை மறந்தவர். 1944ல் இவர் *ஜானகி* என்ற சீரிளஞ் செல்வியைத் திருமணம் புரிந்தார். இந்த அம் மையாரும் இலக்கிய வித்தகி: கணவருடன் கம்பக் கவிதைகளை இனிய குரலில் பாட வல்லவர். இல்லறத் திலும் இசையறத்திலும் கணவனுடன் இணைந்து பணி செய்யும் நல்லாள் ஜானகிதேவி. இவர்கள் கம்பனையே தமது மகவாகக்கொண்டு வளர்க்கிருர்கள். கம்பனுக்கு அடுத்தபடி எனது *பாரதசக்தி மகாகாவியத்தைக்* கற்று ஆராய்ந்து கதை செய்ய முன் வந்துள்ளார் கலை மணி. இவர் கதையைக் கேட்பது மட்டும் போதாது. கண்ணுரக் காணவேண்டும்.

*கம்பக்கலைமணி என் கண்மணி தியாகேசன்*
*இன்பக்கதையை இசைக்குங்கால் - அன்புருக*

*கண்பேசும்: கைபேசும்: கால்பேசும்: செய்யதமிழ்ப்*
*பண்பேசும் பாசிர்! பரிந்து.*

சொல்லுக்கேற்ற உணர்வு: உணர்வுக்கேற்ற குழைவு: குழைவுக்கேற்ற அபிநயத்துடன் அவர் செய்யும் கதை இன்பச் சுதையாகும்: தமிழர் ஊர்தொறும் இவரை யழைத்துக் கதை பருக வேண்டும்: வாழ்வு திருந்தும்: மயக்கந்தீரும்: சமயப் பற்று உண்டாகும்.

* * *

*தியாகராாசர் குணக்குன்று: அவர் தாராள மான உள்ளம் படைத்தவர்: பணத்தைவிடப் பண்பாட்டையே அவர் மிகவும் மதிப்பார். நட்புக்கு இனியவர். பரோபகார சீலர். தமது கதை வருவாயில் இயன்ற தானதருமங்களைச் செய்கிருர். அத்தகைய அன்புப் புலவர் கோத் தணித்த சுந்தரகாண்டத்தைக் கற்றுக் கேட்டுக் கவியென வாழ்வீராக!*

*கற்பகச் சோலை பூத்துக் கனிந்த நம் கம்பன் வாக்கை*
*நற்பயனுறவே *நான்கு நயம் பெறப் புதுமை தோன்றும்*
*அற்புதக் கதை செய் அன்பன் அந்தணத் தியாகராசன்*
*சொற்பொழிவுகந்தார் இன்பச்சுவைபெற வாழ்வதாமே.*

*அறம்; பொருள்; இன்பம்; வீடு.

யோகசமாஜம்,
சென்னை-20
8—6—64

சுத்தானந்த பாரதி

# முன்னுரை

சென்ற 1958ம் வருடம் "ஸ்ரீ ராமகதாசாகரம்" என்ற பெயரில் அடியேன் எழுதிய கம்பராமாயண பாலகாண்டக் கட்டுரைகளைப் புத்தக வடிவில் வெளி யிட்டபோது தமிழன்பர்களும், ஸ்ரீ ராம பக்தர்களும், ரசிகர் உலகமும் வரவேற்று ஆசிகூறி ஆதரித்து மற்ற காண்டங்களையும் கூடிய சீக்கிரம் வெளியிடுமாறு தூண்டினர்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் சுந்தரகாண்டம் மிகமிக அழகானது. *இதனைப் படித்தவர்க்கு வாழ்க்கை யில் வெற்றி கிட்டும். நினைத்த காரியங்கள் யாவும் நிறைவேறும்.* என்று பெரியோர்கள் கூறு வர். 1939ல் அடியேன் மேடையேறிப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தேன். 25 வருடங்களின் முடிவை வெள்ளி விழாவாகக் கொண்டாட ஒரு மலர் வெளியிடுமாறு அன்பர்கள் தூண்டினர். ஒரு மலர் இதற்காக வெளி யிட்டேனென்ருல், விளம்பரங்கள் சேகரிப்பதுடன் என் சுய விளம்பரமான ஒரு உபயோகமற்ற புத்தகமாகி விடும். உலகிற்கு என் சரிதை தேவையில்லை. உலகத் திற்கு நன்மையளிக்கும் சுந்தரகாண்டத்தையே எழுதி வெள்ளி விழா மலராக என் அன்பர்கட்கு அளிக் கிறேன். என் அன்பர்கள் யாவரும் சுந்தரகாண்டம் படித்துச் சகல நன்மைகளையும் அடையவேண்டும் என்றும் அடியேனுக்கும் மற்ற காண்டங்களையும் சீக்கிரம் வெளியிட அருள்புரியுமாறு ஸ்ரீ சீதாராமனை வணங்கி வேண்டிக்கொண்டு இச்சுந்தரகாண்டத்தை வெளியிடு

கின்றேன். இதில் வரும் விஷயங்களில் ஏதேனும் நல்லவை இருந்தால், அது என்னுடைய குருநாதரும், நான் "மாமா" என அழைத்து அன்புடன் வணங்குபவரும், எங்களது குடும்பத்தின் நலங்கருதி என்றும் வாழ்த்திவரும் பெரியார் மதுரை பிரபல வக்கீல் ஸ்ரீ N. R. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்களையே சாரும். குற்றங்கள் என்னுடையனவே. அடியேன் இளவயதினனபடியாலும் இன்னும் மாணவ நிலையிலிருப்பவனுனபடியாலும் பெரியோர் மன்னிப்பர்.

இச்சிறு நூலுக்கு முகவுரையளித்து ஆசி கூறியுள்ள கவியோகி மகரிஷி தவத்திரு. சுத்தானந்த பாரதியார் அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்திக் கொள்ளுகின்றேன். அவர்கள் அன்புக்கும் ஆசிக்கும் என்றும் நான் பாத்திரமாக ஸ்ரீ ராமபிரானை வேண்டுகின்றேன். இப்புத்தகத்தை வெளியிடுவதற்கு முன் பணம் அனுப்பி உதவி செய்த அன்பர்கட்கு நல் வாழ்வும் சுகமும் அளிக்க இறைவனை வேண்டுகிறேன். இதனை அழகாக அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீ செந்தமிழ்ப் பதிப்பகத்தாருக்கு எனது அன்பு கலந்த நன்றி.

ஸ்ரீ ஜெய ஜெய சீதாராம்!

SRI RAMAKATHA
NILAYAM,
Tirugokarnam,
PUDUKKOTTAI-2.
(S. India)



ஸ்ரீ ராமகதாரத்னம்
V. தியாகராஜன்

உ

# ஸ்ரீ ராமகதாசாகரம்

# சுந்தரகாண்டம்

காப்பு

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு எனப்பூ
[தமைந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்
கலங்குவது எவரைக்கண்டால், அவர் என்ப,
[கைவில் ஏந்தி
இலங்கையில் பொருதாரன்றே மறைகளுக்கு
[இறுதி ஆவார்!

## 1. சுந்தரகாண்டம்

நன்மையுஞ் செல்வமும் நாளும் அளிக்கும் நல்லோனுகிய இராமபிரானின் திருச்சரிதையில் அனுமன் கடல் கடந்து சென்று அன்னை சானகியைக் கண்டு கணையாழி தந்து களிப்பூட்டிச் சூளாமணி பெற்றுத் திரும்பி வந்து இராமபிரானிடம் அளித்து அன்னவரை ஆனந்தத்தில் ஆழ்த்திய பாகத்தை "சுந்தரகாண்டம்" என்று கூறுவர். சுந்தரம் என்ருல் அழகியது என்று பொருளாகும். சுந்தர காண்டம் என்பது அழகிய கதைப்பகுதி என்பர். எனின் மற்ற பகுதிகள் அழகிலே குறைந்தவையா? இராமபிரானின் அவதாரத்தையும், குழந்தைப் பருவ விளையாட்டுக்களையும் கூறும் பாலகாண்டம் அழகில் குறைந்ததா? நாடாள வேண்டிய நல்ல தினத்திலே இராமன் காடு புகுந்த தியாகத்தைக் கூறும் அயோத்தியா காண்டம் அழகில்லையா?

நாடுறைச் செல்வியாகிக் காடுறையக் கணவனுடன் வந்த சீதா தேவி "கற்பினுக் கணி" என்று உலகமறிவதற்காக சிறை புகுந்த செம்மையைக் கூறும் ஆரணியகாண்டம் அழ கில்லாததா? உலகநாயகனும் இராமபிரானையும் அன்னவ னின் பெருமையும் அப்பெருமானின் திருநாமத்தைக் கூறி அந்நாமத்தின் பெருமையால் பெருமை பெற்ற அனுமானின் தோற்றம் முதலானவற்றையும் அன்னவன் "சொல்லின் செல்வன்" என்று பெயர் பெற்ற பெருமைகளை எல்லாம் விவரித்துக் கூறும் கிட்கிந்தா காண்டம் அழகிலே குறைந் ததா? யாவற்றிற்கும் மேலாக "நரசிம்மாவதார"க் கதை யைத் தன்னகத்தே கொண்டதாய், இராமபிரான் "திருமுடி சூட்டிக் கொண்ட" வைபவம் கூறும் அழகிய வரலாறுகளை உடைய யுத்தகாண்டம் அழகிலே குறைந்ததா? இந்தப் பகுதிக்கு மாத்திரம் "சுந்தரகாண்டம்" எனப் பெயரிட்டதன் காரணத்தைச் சிறிது ஆராய்வோம்.

சுந்தரன் என்பது அனுமனின் திருநாமங்களில் ஒன்று எனக் கூறுவர். சிவபெருமானே அனுமனாக வந்தார் என் பது ஒரு சாராரின் அபிப்பிராயம்.

*வாயு மற்றெனது கூறு மாருதி எனலும் மற்றோர்*
*காயு மற்கடங்களாகிக் காசினி அதனின் மீதே*
*போயிடத் துணிந்தோமென்றார்; புராரி மற்றுயானே [வாத*
*சேயெனப் புகன்றான் மற்றைத் திசையுள்ளோர்க் [கவதியுண்டோ*

என்று கம்பன் பாலகாண்டத்தில் கூறுகின்றான். சிவபெருமா னின் பெயர் "சுந்தரன்" என்பர். திருவிளையாடற் புராணத் தின் அவையடக்கத்திலே பரஞ்சோதி மாமுனிவர் "சுந்தரன் சரிதம்"

*......................நீர் பிரித்து அன்னம் உண்ணும்*
*தூய தீம்பால் போல் கொள்க சுந்தரன் சரிதந் [தன்னை*

என்று திருவிளையாடற் புராணத்தைப் பற்றிப் பேசுகின்றார். எனவே "சுந்தரனாகிய" சிவபெருமானே அனுமானாக வந்தது பற்றிக்கூறும் கதை பாகத்திற்கு "சுந்தரகாண்டம்" என மகுடமிட்டுள்ளனர் என்பர் சிலர். **இது எமது அபிப்பிராயம் அல்ல.**

அழகின் பிழம்பாய் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினையுடையவனும் புண்ணியமூர்த்தியான இராகவனின் உத்தம லட்சணங்கள் யாவற்றையும் சிறையிருந்த செல்வியாம் சீதையிடம் சொல்லின் செல்வனும் அனுமன் 20 பாடல்களில் வருணிக்கிறான். சுந்தர குமாரனாகிய இராமனின் அழகை விவரிக்கும் பாடல்களைத் தன்னிடையே கொண்டதாயிருப்பதால் இப்பகுதிக்குச் "சுந்தரகாண்டம்" எனப் பெயரிட்டார் என்பர். **எமது அபிப்பிராயமும் இதுவே.**

இராமாயணச் சொற்பொழிவு கேட்போர், சொற்பொழிவு நிகழ்த்துவோர் யாராயிருந்தபோதிலும் தினசரி ஒரு முறை சுந்தரகாண்டம் பூராவும் படித்து முடித்தால்தான் சொற்பொழிவு ஆற்றவோ கேட்கவோ உரிமையுண்டு. இப்பகுதி இராமகாதையில் மிகப் பெரிய பகுதி. ஒரே நாளில் படித்து முடிக்க இயலாது. ஆதலால் கம்பன் கருணையோடு இந்தப் பகுதியை நான்கே வரிகளில சுருக்கி நமக்கு அளித்துள்ளான். இப்பாட்டினைப் படித்தாலே ஒருமுறை சுந்தரகாண்டம் படித்த பலன் உண்டு என்பர்.

உலகம் ஐந்து பொருள்களால் ஆனது மண், தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவைகளே. இவ்வைந்தையும் வைத்துச் சுந்தரகாண்டத்தைச் சுருக்கமாகப் பாடிச் சுந்தரகாண்டத்தின் சுந்தர நாயகன் அனுமான் நம்மைக் காப்பான் என்று கூறுகின்றான் கம்பன். அனுமன் ஐந்திலொன்றாகிய காற்றின் மகன். ஐந்திலொன்றாகிய மண் (பூமிதேவி) பெற்ற மகள் சீதை. அவளைக் காண்பதற்காக அனுமன் ஐந்திலொன்றாகிய தண்ணீரை (கடல்)

தாவுகின்றான். ஐந்தில் ஒன்றாகிய ஆகாயத்தை வழியாக (ஆறு-வழி) க் கொண்டு இராமனின் உயிராகிய சீதையைக் காப்பாற்றச் செல்கின்றான். அங்கு சென்று ஐந்தில் ஒன்றாகிய தீயை வைத்து அரக்கரை வென்ற அனுமான் நம்மைக் காப்பான் என்று கூறும் கம்பனின் அழகிய திருப்பாட்டு இதோ:—

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆறாக ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டு
[அயலாரூரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவனம்மையளித்து
[காப்பான்.

சிறையிருந்த செல்வியாம் சீதையைக் கண்டு கணையாழி யளித்துக் களிப்பூட்டி சீதாநாயகனிடம் திரும்பிவந்து சூளாமணி கொடுத்த சூரனும் அனுமனின் திருவடிகளை நாமும் வணங்கி வழிபடுவோமாக! ஸ்ரீ ஜய சீதாராம்!

## 2. அலைகடல் கடந்த அன்பன் அனுமான்!

சுந்தரகாண்டம் தொடங்கும் கவிஞன் சுந்தரமாகவே தொடங்குகின்றான். ஆண்தகை என்ற அழகிய சொல்லால் ஆரம்பிக்கின்றது இக்காண்டத்தின் முதற் செய்யுள். ஆண் தகை என்றால் ஆண்மையிற் சிறந்தவன். புருஷோத்தமன் என்கின்றார். உத்தமனாயிருந்தாலொழிய தூது செல்ல ஒவ்வாது என்பது குறிப்பு. பஞ்ச பாண்டவருக்கு பாதி அரசு கேட்டு தூது சென்ற கண்ணனைப் புகழேந்தி

"பாண்டவரின் முன்தோன்றல் பார்முழுதும்
[தோற்றொருநாள்
ஆண்டகையே சென்று அவனி வேண்ட" என்றவாறு

"ஆண்தகை" என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்.

பரந்து கிடக்கும் சமுத்திரக் கரையிலுள்ள அழகிய பெரிய மலேயான மாகேந்திரத்தின் மீது அனுமான் நிற்கின்ருன். அனுமன் எதிரிலிருக்கும் கடல் பரந்து கிடப்பது பெரிய சம்சாரம் ஆகிய கடலுக்கு உவமையாகின்றது. அக்கரையில் இலங்கையில் ஜீவான்மாவாகிய சிதையும் இக்கரையில் பரமான்மாவான இராமனும் உள்ளனர். ஜீவான்மாவும் பரமான்மாவும் ஒன்று கூடத் தடையாயிருக்கும் சம்சாரம் போலிருக்கின்றதாம் கடல். சகல கலா வல்லவனுகிய குருநாதன் ஜீவான்மாவுக்கு பரமாத்மாவின் கருணேயை தெரிவித்துத் திரும்பிவந்து பரமாத்மாவிடம் ஜீவாத்மாவைப் பற்றிய நிலேயை அறிவுறுத்தி இருவரையும் சேர்த்து வைக்கின்ருர். எனவே நவவியாகரண பண்டிதனுகிய அனுமான் குருநாதன் என்று வேதாந்த பரமாகச் சுந்தரகாண்டத்திற்குப் பொருள் கூறுவர் பெரியோர்.

*            *            *

பேருருவங்கொண்டு நின்ற அனுமான் கண்களுக்கு தேவலோகம் தென்படுகின்றது. "இதுவா இலங்கை!" என்று ஆச்சரியத்துடன் நோக்கி, "இது இலங்கையல்ல! இது தேவருலகம்!" என அறிந்து தனது பார்வையைக் கீழே செலுத்த பூவுலகின்கண் இலங்கையைக் காண்கின்ருன்! அனுமன் நின்ற நிலேயிலேயே தேவருலகம் பூவுலகம் என்ற இரு உலகங்களேயும் கண்டான் என்பது குறிப்பு.

ஆண்தகை ஆண்டவ்வூரனேர் துறக்கநாடு
[அருகில்கண்டான்;
ஈண்டு இதுகொல் வேலே இலங்கை என்று ஐயம்
எய்தா,]
வேண் தருவிண்ணுடு என்னும் மெய்ம்மைகண்டு
[உள்ளமீட்டான்
காண்தகு தோகை உம்பர்இல் எனக்கருத்துக்
[கொண்டான்.

470



இலங்கையைக் கண்ட அனுமான் அங்கு செல்லப் போகின்றேம் என்ற மகிழ்ச்சியில் தன் தோள்களைத் தட்டி ஆரவாரித்துப் புறப்படுவதற்காகத் தன் கால்களைக் கீழே வைத்து அழுத்துகிறன். அனுமன் அவ்வாறு அழுத்திய காலையில் பாரம் தாங்காது மலைகளிலுள்ள குகைகள் நொறுங்கி வாய் மூடிக்கொள்ள அவைகளில் இருந்த மிருகங்கள் நசுக்கப்பட்டு பாறைகளின் இடுக்குகள் வழியாக ரத்த மாமிசங்கள் வெளிவரலாயின. இடுக்குகளில் வாழ்ந் திருந்த பாம்புகள் வெளிப்பட்டபோது நசுக்கப்பட்டு அவை கள் தொங்கிக்கொண்டிருந்தன. அந்தக் காட்சி மலைக்கு வயிறு பிதுங்கி அதனுடைய குடல் வெளிவந்துவிட்டதோ என்று எண்ணும்படி இருந்தது.

வன்றந்த வரிகொணுகம் வயங்கனலுமிழும்வாய
பொன்றந்த முழைகடோறும் புறத்துராய்
[புரண்டுபோவ
நின்றந்தமில்லானூன்ற நெருங்கிக் கீழமுந்தித்
தானும்
குன்றந்தன் வயிறு கீறிப்பிதுங்கின குடர்கண்மான.

மலையில் ஏற்பட்ட ஆட்டத்தினல் மரங்களில் வாழ்ந்த பறவைகள் புறப்பட்டு ஆகாயத்தில் பறந்து கத்திய ஓசை கடலின் அலையோசையை அடக்குவதாயிருந்தது. ஆகா யம் பூராவும் பறவைகள் நிறைந்து சூரியனையே மறைத்து விட்டன. மலையிலுள்ள யானைகள் நடுங்கி கால்களையும் காதுகளையும் விசிக்கொண்டு மரங்களைப் பிடித்துக்கொண்டு கதறின. மலை நடுங்கிய காலத்தில் மலைமீதிருந்த சில தேவர்களை அவர்களுடைய மனைவியர் ஓடிவந்து தழுவிக் கொண்டனர். கைலாயத்தை இராவணன் எடுத்தபோது பயந்து தனது நாயகனைப் பார்வதிதேவி அணைத்துக் கொண்டாளாம். அதேமாதிரி காட்சி மாகேந்திரத்தில் அநேக பரமசிவர்களை அவர்களுடைய தேவியர்கள் அணைத்துக் கொண்டமாதிரி காணப்பட்டதாம்.

வெயிலியற் குன்றங்கீண்டு வெடித்தலும் நடுக்க
[மெய்தி
மயிலியற் றேவிமார்கடமீ இக்கொளப் பொலிந்த
[வானேர்
அயிலெயிற்ற ரக்கனள்ளத் திரிந்த நாளணங்கு
[புல்லக்
கயிலேயிலிருந்த தேவைத் தனித்தனிக் கடுத்தல்
[செய்தார்.

இந்நேரத்தில் தேவர்களும் முனிவர்களும் மலர்மாரி பொழிந்து ''அகத்தியனுடைய கையில் உளுந்தளவாக எடுத்துப் பருகப்பட்ட கடல்தானே என்று அலக்ஷியமாக இல்லாமல் புறப்படு'' என்று கூற அனுமன் புறப்படு கின்ருன். தெருக்களிலே செல்லும் மோட்டார் முதலான வாகனங்கள் வேகமாகச் செல்லும்போது அந்தக் காற்று வேகத்தின் காரணமாக தெருவில் உள்ள குப்பை கூளங்களைச் சுமந்து பறந்து சிறிது தூரம் கூடச்செல் கின்றன அல்லவா? அதுபோல் அனுமான் கிளம்பிய வேகத்தில் அங்கிருந்த மலே, மரங்கள், யானைகள் முதலானவை கூடவே பறந்து சென்றனவாம். இராம காரியமாகச் செல்லும் அனுமானுக்குத் தாமும் துணையாகச் செல்வதுபோல் அவைகள் பறந்தன என்கின்ருன் கவிஞன்.

ஆயவனெழுதலோடும் அரும்பணே மரங்கள் தாமும்
வேயுயர் குன்றும் வென்றிவேழமும் பிறவுமெல்லாம்
நாயகன் பணியிதென்ன நளிர் கடலிலங்கைதாமும்
பாய்வன என்ன மானம் படர்வன எமுவமான.

சிறிது தூரம் சென்ற குப்பை கூளங்கள் தாமாக விழுந்து விடுகின்றன அல்லவா? அம்மாதிரியே அனுமன் பின் சென்ற மலே, மரம், யானைகள் முதலானவை கடலில் விழுந்துவிட்டன. இராமனின் ஆதரவுடன் செல்லும் அனுமனுடன் போட்டியிடச் சக்தியில்லாது அவை விழுந்துவிட்டனவாம்.

இசையுடை அண்ணல் சென்ற வேகத்தால் எழுந்த
[குன்றும்
பசையுடை மரனுமாவும் பல்லுயிர்க் குலமும்வல்லே
திசையுறச் சென்று சென்றுசெறி கடலிலங்கை
[சேரும்
விசையிலவாகத் தள்ளி வீழ்ந்தன என்ன வீழ்ந்த.

அவ்வாறு அனுமான் செல்லும் வேகத்தால் சமுத்திரத்தின் நீர்ப்பரப்புக் கிழிந்து பாதாளலோகம் தென்படுகின்றது. பாதாள லோகத்தில் பாம்பரசர்கள் கொலு வீற்றிருக்கும் காட்சியைக் கண்ட அனுமான் "இராமகாரியமாகச் செல்லும் எனக்குப் பாம்பரசர்கள் கொலு வீற்றிருக்கும் காட்சியும் காணக் கிடைத்ததே" என்று இறும்பூதெய்துகின்றான்.

கீண்டதுவேலை நல்நீர் கீழ் உறக்கிடந்த நாகர்
வேண்டிய உலகமெல்லாம் வெளிப்பட மணிகள்
[மின்ன
ஆண்தகை அதனைநோக்கி அரவினுக்கரசர்
[வாழ்வும்
காண்தகு தவத்தன்ஆனேன் யானெனக்கருத்துட்
[கொண்டான்.

அவ்வாறு அனுமான் கடல் கடந்து ஆகாயத்தில் பறந்து செல்வதைக் கவிஞன் "சிவபெருமானில்லாது கைலாயமலை இராவணனை மறுபடியும் அமுக்குவேன்" என்று செல்லு வதுபோலிருக்கின்றது என்கிறான்.

சிவபெருமான் வீற்றிருந்த கைலாய மலையை இராவணன் கையில் அள்ளி எடுத்த காலத்தில் அம்மை பார்வதியார் அஞ்ச இறைவன் சிறிது புன்னகை பூத்துத் தன் சிறு விரலால் அழுத்த மலையடியில் அகப்பட்டுக் கொண்ட இராவணன் அலறினான். சிறு விரலாலேயே சிறிது அதிகம் அழுத்தி ஊன்றியிருந்தால் இராவணன் இவ்வுலகை மீண்டும் பார்த்திருக்கமாட்டான். இறந்தே

போயிருப்பான் என்று குறிப்புத்தோன்ற அப்பர் ஸ்வாமி களின் தேவாரத் திருப்பாட்டு ஒன்று உண்டு.

கறுத்தவன் கண்சிவந்துகைலை நன்மலையைக்
[கையால்
மறித்தலும் மங்கை அஞ்ச வானவர் இறைவன் நக்கு
நெறித்தொரு விரலாலூன்ற நெடுவரைபோல
[வீழ்ந்தான்
மறித்திறை யூன்றினனேல் மறித்து நோக்கில்லை
[யன்றே.

சிவபெருமான் கருணைக் கடல். சிறு விரலாலுன்றி இராவணனை அமுக்கினார். அவன் அலறி சாமகானம் செய்தவுடன் ஊன்றிய விரலை எடுத்து இராவணனை உயிருடன் விட்டுவிட்டார். ஆதலால் சிவபெருமான் தன் மீது உள்ளவரை இராவணன் அழியமாட்டான் என்று எண்ணிய கைலை மலை சிவபெருமான் தன்னை நீங்கி எங்கேயோ சென்றிருந்தபோது அவரில்லாமலே புறப்பட்டு 'இராவணனை இன்னொரு முறை அமுக்கி வருகிறேன்'' என வந்தமாதிரி அனுமான் இலங்கை நோக்கி வரு கின்றான் என்கிறான் கவிஞன்.

விண்ணவரேத்த வேதமுனிவரவர் வியந்து வாழ்த்த
மண்ணவரிறைஞ்சச் செல்லும் மாருதி மறமுட்கூர
அண்ணல் வாளரக்கன்தன்னை யமுக்குவா
[மின்னமென்னக்
கண்ணுதல் ஒழியச் செல்லும் கைலையங்
[கிரியுமொத்தான்.

சிவபெருமானின் கருணையும் இராவணனின் சிவபக்தியை யும் அறிவதோடு என்ன நல்லவனாயிருந்தாலும் குற்ற மிழைத்தவனை நல்லோர் வெறுத்து ஒறுப்பர் என்னும் எண்ணத்தையும் அறிவுறுத்துகிறது இப்பாட்டு.

அவ்வாறு செல்லும் அனுமானைத் தடுப்பதுபோல் வருகின்றது மைந்நாகமென்னும் மலை. நீர்ப்பரப்புக்கு

மேலாக நிமிர்ந்து வளர்ந்து தன்னைத் தடுப்பதுபோல் வரும் மலையைக் கண்ட அனுமான் நேராகப் பறந்து செல்லும் தன் கதியை மாற்றி மேல் நோக்கிச் செல்லு கின்றான். இதுகண்ட மைந்நாக மலையின் தேவதை ஒரு மனித வேடந்தாங்கி அனுமான் எதிரில் வந்து "பூர்வத்தில் இந்திரன் மலைகளின் சிறகுகளைத் தன் வஜ்ஜிராயுதம் கொண்டு அறுத்தான். அவ்வேளையில் உன் தந்தையாகிய வாயு தேவன் தன் சக்திகொண்டு அடித்துவந்து இக் கடலில் தள்ளி என்னைக் காபபாற்றினான். அப்படிப்பட்ட வாயு பகவானின் குமாரனாகிய உனக்கு என் நன்றியைக் காட்டும் அடையாளமாக ஏதாவது செய்யலாமென வந் தேன். என்றால் வாயு குமாரனாகிய உனக்கு என்ன செய்யமுடியும்? பெருமானே! சிறிது என் சிகரத்தின்மீது தங்கி இளைப்பாறினால் அதுவே எனக்குத் திருப்தி அளிக் கும்" என்று கூற, அனுமான் "மைந்நாக! இராமனையே வணங்கும் எனக்கு வருத்தம், களைப்பு என்பவை கிடை யாது. மேலும் இராம காரியத்தைச் செய்து முடித்தா லன்றி எதையும் அருந்த எனக்கு இஷ்டமில்லை. மைந்நாக! ஆயினும் இங்கு இறங்கியதும் உன் அன்பா கிய தேனைக் குடித்துவிட்டேன். வேறு எனக்கு என்ன வேண்டும்?

வருந்தேன் இது என்துணை வானவன் வைத்த
[காதல்
அருந்தேன் இனியாது மென்னுசை நிரப்பினல்லால்
பெருந்தேன் பொழிசார! நின் அன்பு பிணித்த
[போதே
இருந்தேன் நுகர்ந்தேன் இதன்மேல் இனி
[ஈவதென்னோ

அன்பாகிய தேனைச் சாப்பிட்டு எனது ஐம்புலன்களும் திருப்தியடைந்துவிட்டன என அனுமான் கூறுவதுபோல் இத்திருப்பாட்டில் ஐந்து முறைகள் தேன் என்ற சொல் வந்திருக்கின்றது என்பர் சில ரசிகர். "இராம காரியத்

தைச் செவ்வையாகச் செய்து முடித்து சமயம் நேர்ந்தால் மீண்டும் வரும்போது இறங்கி உன் பூஜனையை ஏற்றுக் கொள்வேன்" என மீண்டும் கூறிய அனுமான் மைந்நாக னின் பதிலுக்குக் காத்திராமல் மேலும் தன் பயணத்தைத் தொடங்குகின்றான்.

*  *  *

மூன்று உலகத்திற்கும் துன்பத்தை விளைவிக்கும் இரா வணன் ஊரை நோக்கிச் செல்லும் அனுமனுடைய பலம் எவ் வாறிருக்குமோ என எண்ணிக் கவலையடைந்திருக்கும் தேவர்களுக்கு அனுமானின் பலத்தைச் சோதித்துக் காட்டு கிறேன் என்று அன்னை போன்ற நல்லுள்ளம் படைத்த சுரசை என்னும் அம்மை அரக்கியுருவம் கொண்டு அலையடிக் கும் கடலுக்கு நடுவில் அனுமான் எதிரே "ஆ" வென்று திறந்த வாயுடன் எதிர்ப்பட்டு "தகிக்கும் பசியுடைய என் வாய் எதிரில் வந்து நிற்கும் கொடையாளியே! வேறெங் கும் வழி இல்லை. என் வாய்க்குள்ளேயே நுழைந்துகொள்" என வரவேற்கிறாள்.

*தீயே எனலாய பசிப்பிணி தீர்த்தல் செய்வாய்*
*ஆயே விரைவுற்றெனை அண்மினை வண்மையாள!*
*நீயே இனிவந்துஎன் நிணங்கொள் பிணங்கெயிற்றின்*
*வாயே புகுவாய் வழிமற்றிலை வானில் என்றாள்.*

திறந்த வாய்க்கு எதிரே "இதோ! ஆகாரமாகிறேன்" என் பதுபோல் அனுமன் வந்து நிற்பதாக எண்ணிய சுரசை "வண்மையாள!" எனப் பரிகாசமாக அழைக்கிற ரசிகத் தன்மையைப் பாருங்கள்! "பெண்ணாகப் பிறந்து தனியா யிருக்கும் உன்னால் பசிகூட பொறுக்காது. என் உடலை நீ சாப்பிட்டுப் பசி தீரலாம். ஆனால் உன் பசி சமயந்தெரியாத பசியாயிருக்கின்றதே! இராமகாரியம் முடிந்து நான் திரும்பி வரும்போது இந்தப் பசி வரக்கூடாதா?" எனப் பரிகாசமாக அனுமான் கூறுகிறான் "அடே! உலகேழும் காண உன்னை விழுங்கிப் பசியாறப் போகிறேன். உன்மீது ஆணை" என்று

அவள் கோபமாக பதிலிறுக்க "அம்மனி! வாயைத்திற. முடியுமானுல் என்னை விழுங்கு" என அனுமான் பதில் கூறு கிருன். அனுமான் தன் உடம்பைப் பெரிதாக்கப் பெரிதாக்க அரக்கியுருவம் கொண்ட அம்மையும் உலகத்தையே விழுங் குவதற்குத் தயாராக வாய் திறந்து விடுகிருள். அனுமான் திடீரென்று தன் உடலைச் சுருக்கி அவள் வாய்க்குள் புகுந்து வெளிவந்து விடுகிருன். அந்த அம்மையும் ஆசி கூறுகிருள்.

*நீண்டான், உடனே சுருங்கா நிமிர் வாயிடத்தின்*
*ஊண்டான் எனஉற்று, ஓர் உயிர்ப்பு உயிராத [முன்னம்*
*மீண்டான்! அதுகண்டனர் விண்ணுறைவோர்கள் [''எம்மை*
*ஆண்டான்வலன்'' என்று அலர்தூய் நெடிதாசி [சொன்னர்*

இந்த இரண்டாவது சோதனையிலும் வெற்றி பெற்ற அனுமானுக்கு நிழலைப் பிடித்திழுக்கும் அரக்கியான அங் காரதாரை உருவத்தில் மற்ருெரு சோதனையும் ஏற்படுகின் றது. தன் நிழலைப் பிடித்திழுக்கும் அவளைக்கண்ட அனு மான் "என் நிழலைப் பிடித்திழுத்தாய்! நான் வந்த வேகத்தை அறியவில்லை. ஆவென்று வாய் திறந்து வான வெளியை அடைத்துக்கொண்டிருக்கும் நீயார்? என மிரட்டு கிருன்"

*சாயா வரந்தழுவினுய் தழிய பின்னும்*
*ஓயாது வந்த விசை கண்டுணர கில்லாய்*
*வாயாலளந்து நெடுவான் வழியடைத்தாய்*
*நீயாரை? என்னை? இவண் நின்ற நிலை என்ருன்*

"அடே! பெண்பால் என்ரு என்னை மிரட்டுகிருய்? யமனையே நான் சாப்பிட்டு விடுவேன்" என்று கூறி வாய் திறந்திருக் கும் அவள் வாய்க்குள் அனுமான் நுழைகின்ருன். தரும தேவதையும், தேவர்களும் "ஐயோ" அனுமான் இறந்து விட்டான் எனக்கதறும் நேரத்திற்குள், "பிறந்தான் பிறந்

தான் எனப் பேருவகை கொள்ளும் வண்ணம் வெளிவந்து விடுகின்ருன். அஞ்சனு தேவியின் குடலுக்குள் குடியிருந்து வெளிவந்த அனுமான் இன்று இவ்வரக்கியின் குடலையும் பிடுங்கிக்கொண்டு வெளிவந்து விடுகிருன்.

*திறந்தாள் எயிற்றை அவள்! அண்ணல் இடை*
*[சென்ருன்!*
*அறந்தான் அரற்றியது! அயர்த்து அமரர்*
*[எய்த்தார்!*
*இறந்தான் எனக்கொடு; ஓர் இமைப்பதனின்*
*[முன்னர்*
*பிறந்தான்! எனப்பெரிய கோளரி பெயர்ந்தான்.*

இது கண்டு தேவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். கைலாய பதியான பரமசிவனே இது என்ன எனத் தென்திசை திரும்பி இலங்கையைக் காண்கின்ருர்

*ஆர்த்தனர்கள் வானவர்கள்; தானவர் அழுங்கா*
*வேர்த்தனர் விரிஞ்சனும் வியந்துமலர் வெள்ளம்*
*தூர்த்தனன்; அகன் கயிலையில் தொலைவிலோனும்*
*பார்த்தனன் முனித்தலைவர் ஆசிகள் பகர்ந்தார்.*

கஷ்டத்திற்கு மேல் கஷ்டமாக, சோதனைக்கு மேல் சோதனை யாக வருகின்றன. எல்லாக் கவலைகளும் அரக்கர் செய்யும் தீமைகளும் திர "ராம" என்னும் நாமம் துணைபுரியும் என திடமாக எண்ணிய அனுமன் இலங்கையின் வடகரையை அடைகிருன்.

*ஊறு கடிதூறுவன; ஊறில் அறம் உன்னுத்*
*தேறல் இல் அரக்கர்புரி தீமையவைதீர*
*ஏறும் வகை எங்குளது; இராம என எல்லாம்*
*மாறும்; அதின் மாறுபிறிதில் என மதித்தான்.*

இவ்வாறு ராமநாமத்தையே துணையாகக் கொண்ட அனுமான் இலங்கையை அடைந்து ஊருக்கு வெளியிலேயே

இருந்து ஊரினுடைய கம்பீரத்தையும் அழகையும் பெருமை யையும் அனுபவிக்கிறன்.

## 3. தேவி சீதையை தேடிடும் அனுமான்!

பொன்னாலும் மணியாலும் அலங்காரிக்கப்பட்ட இலங் கையின் மாட மாளிகைகளைக் கண்ட அனுமான் நிஜ மாகவே "பொன் கொண்டு இழைத்து மணி பொதிந்த மாளிகைகளா? மின்னலின் காந்தியையும் வெயிலின் ஒளியையும் விடாகக் கட்டிவிட்டார்களா? எதனல் வீடு கட்டினர்கள்? எப்படிக் கட்டினர்கள்?" என்று ஆச்சரியப் படுகின்றன்.

பொன் கொண்டிழைத்த? மணியைக்கொடு
[பொதிந்த?
மின் கொண்டமைத்த? வெயிலைக்கொடு
[சமைத்த?
என் கொண்டியற்றிய? எனத் தெரிகிலாத
வன் கொண்டல்விட்டு மதிமுட்டுவன மாடம்.

ஆம்! தங்கத்தினல் வீடு கட்ட முடியுமா? கட்டலாம். ஆனல் கவிஞன் கூறுவது சன்னமான சிப்பிச் சுண்ணாம்பு தீற்றிய அழகிய மாட மாளிகைகளில் மாலை மஞ்சள் வெய்யில் அடிக்கும்போது வீடு பூராவும் தங்கத்தினல் கட்டிவிட்டார்களோ என மயக்கமாகவே தோன்றுகின்ற தாம்.

திருவிளையாடற்புராணத்தின் மதுரையம்பதியிலுள்ள வணிகர் தெருக்களை வருணிக்கும் பரஞ்சோதி மாமுனிவர், "வணிகர் விட்டின் கடைசிப் பின்புறக் கதவு தங்கத்தினல் செய்யப்பட்டு வயிரத் தாளிடப்பட்டுள்ளது" எனப் பாண்டி நாட்டின் செல்வச் சிறப்பைக் கூறுகின்றர்.

"செயிரிற்றீர்ந்த செம்பொன்னினல் திண்ணிலைக்
[கதவம்
வயிரத்தாளுடைத்தவர் கடைவாயிலுமென்றல்"

அதே மாதிரி இலங்கையிலுள்ள பெண் மக்கள் உயர மான மாடிமீதேறி மின்னல் கீற்றை பிடித்திழுத்து அதை விளக்குமாருகக் கொண்டு ஆகாய கங்கையினை அள்ளித் தெளித்து கீழே இருக்கும் குப்பைகளைப் பெருக்குகின்ருர் களாம்! என்ன குப்பை தெரியுமா? அவர்கள் அணிந்து கொள்ளும் வாசனைப் பொடிதான் குப்பையாகிவிட்டது. வேறு குப்பை கிடையாது.

> மாகாரின் மின்கொடி மடக்கினர் அடுக்கி
> மீகார மெங்கணும் நறுந்துகள் விளக்கி
> ஆகாய கங்கையினை அங்கையினின் அள்ளிப்
> பாகாய செஞ்சொலவர் வீசு படுகாரம்.

இதிலிருந்து ஆகாய கங்கையைக் கையால் தீண்டி எடுக்கக்கூடிய அளவு மாளிகை உயரமானதாயிருந்ததென்றும் அந்நாட்டில் வாசனைத் திரவியங்கள்தாம் குப்பையாகத் தள்ளப்பட்டன என்ற செழுமையையும் அறிகிருேம்,

அந்த ஊரில் சூரியனுடைய தேரைத் தவிர மற்ற உலகிலுள்ள எல்லாத் தேர்களும் இராவணனுடையவை! குதிரைகளோ, சூரியன் ஏறிவரும் தேரிலுள்ள குதிரைகள் ஏழு தவிர யாவும் இங்குதான்! அட்ட திக்கஜங்களாகிய எட்டு யானைகளும் விநாயகர் என்னும் யானை தவிர மற்ற எல்லா யானைகளும் இராவணனுக்குச் சொந்தம்!

செல்வச்சீமான்கள் தங்கள் வீட்டில் நவராத்திரி கொலுவிற்காக வெள்ளி தங்கம் இவற்ருல் மரஞ்செடி கொடிகள் செய்வதுண்டு. வேலூரில் எனது அரிய நண்பரான பிரபு ஒருவர் தமிழ் வித்வான்களுக்குப் பால் கொடுப்பதற்கு ஒரு தங்கக் கிண்ணமே வைத்திருக்கின்ருர். இலங்கையில் தங்கத்தினுலும் வெள்ளியினுலும் செய்யப்பட்டிருந்த மரஞ்செடி கொடிகள் தானுகவே பூத்து, தேன் பெய்து, காய்த்து, பழுத்தன என்கிருன் கவிஞன். இராவணனுடைய சிவபக்தி இம்மாதிரியான அசாதாரண காரியங்களையும் செய்தது என்பது குறிப்பு.

வானும் நிலனும் பெறுமாறு இனி மற்றும்
[உண்டோ?
கானும், பொழிலும், இவை செங்கனகத்தினாலும்
ஏனை மணியாலும் இயற்றியவேனும் யாவும்
தேனும், மலரும், கனியும் தரத்தந்த செய்கை!

"இந்த நகரத்தில் ஆடிப்பாடி அகமகிழ்ந்து களிப்புடன் இருப்பவரையன்றி கவலையுடனிருப்பவர் ஒருவரைக்கூடக் காணேமே" என ஆச்சரியம் அடைகின்றான் அனுமன். "இராமனிடம் திரும்பச் சென்று பேசுங் காலத்தில் இந் நாட்டின் விற்படை பெரியதென்று கூறுவேனா? வாட் படை வலிமையானது என்பேனா? எந்தப் படை வலிமை யானது என்று கூறுவேன்?" என யோசிக்கிறான். இந்த இலங்கையின் செல்வத்தையும் வளத்தையும் அழகையும் விவரிக்கப்புகுந்த கம்பன் "இந்த நகரத்தை நிர்மாணம் செய்த தேவதச்சனைப் புகழ்வேனா? தேவதச்சனையே தனக்குச் சேவகனாகக் கொள்ளவும் மற்ற போகங்களையும் அடையவும் அரக்கன் செய்த தவத்தைச் சிறப்புறக் கூறு வேனா? அல்லது பிரமன் இராவணனின் தவத்தை மெச்சி அளித்துள்ள இந்த வரத்தைச் சிறப்பித்துப் பேசுவேனா? நைந்த உள்ளத்தையுடைய என்னால் எதைக் கூறுவது என்றே தெரியவில்லையே" என்று தானே பிரமிப்பதாகக் கவிக் கூற்றில் கூறிவிடுகிறான்.

தெய்வதச்சனைப் புகழ்துமோ? செங்கண்
[வாளரக்கன்
மெய்யொத்தாற்றிய தவத்தையே வியத்துமோ?
[விரிஞ்சன்
அய்யப்பாடிலா வரத்தையே மதித்துமோ?
[அறியாத்
தொய்யற் சிந்தையாம் யாவரையா தென்று
[துதிப்பாம்

அனுமான் ஊருக்கு வெளியிலேயே நின்று ஊரின் அழகைக் கண்டு ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும்போது

மாலைப்பொழுது போய் இருள் வந்து விடுகின்றது. நல்ல வம்சத்திலே பிறந்த இராவணன் கீர்த்திமானுகத் திருப்புக ழுடன் விளங்கியவன்: உத்தமி சீதையை எடுத்து வந்து சிறையிட்டகாரணமாக அவனுடைய கீர்த்தியான திருப்புகழ் கருப்புகழான அபகீர்த்தியாக மாறிவிட்டது. இராவணனின் அபகீர்த்தி பரவியமாதிரி இருள் உலகமெங்கும் பரவி விட்டது என்கிருன் கவிஞன். பின் நிலாத்தோன்றுகிறது. இந்தப் பகுதியில் கம்பன் நட்சத்திரங்கள் உதயமான தன்மையை வேறு எந்தக் கவிஞனும் வர்ணிக்காத பாணியில் பாடு கின்ருன். அனுமான் கடல் கடந்து வரும்போது மைந்நாகம், சுரஸை, சாயாக்ராஹி ஆகிய மூவருடைய தடங்கல்களையும் கடந்து வெற்றி பெற்று வந்தானல்லவா? அவ்வாறு வரும் போது ஒவ்வொரு தடவையும் தேவர்கள் மலர் மாரி பொழிந்து தமது களிப்பைத் தெரிவித்துக் கொண்டார் களாம். தேவலோகமலர்கள் பூமியில் விழுந்தால் உலகம் பூராவும் வாசனைவீசும். இராவணன் மூக்கிற்கு எட்டலாம் ஏது என்று விசாரித்து இராவணன் விஷயம் அறிந்து கொண்டு அனுமானுடைய வரவை அறிந்து அனுமானை வந்தவுடன் கைது செய்து விடலாமல்லவா? அதனுல் தான் அந்தமலர்கள் மண்ணில் விழாமல், விணுகவும் போகாமல் ஆகாயத்தில் பதிந்து கொண்டன போலும்! அவைகள்தான் நட்சத்திரங்கள் என்கிருன் கம்பன்.

எண்ணுடை அனுமன்மேல் இழிந்த பூமழை
மண்ணிடை வீழ்கில: மறித்தும் போகில!
அண்ணல் வாளரக்கனை அஞ்சி ஆய்கதிர்
விண்ணிடைத் தங்கின போன்ற மீனெலாம்.

அவ்விரவு நேரத்தில் இலங்கையில் இராவணனின் காவற் படையின் பெருமையைக் கண்ட அனுமான் "சண்டை ஆரம் பித்தால் எவ்வாறு முடியுமோ? கடல் கடந்து வருவதைக் காட்டிலும் இந்தக் காவற்கடலைக் கடப்பது மிகவும் கடின மாகத் தோன்றுகின்றது சிறிது அஜாக்கிரதையாயிருந் தாலும் காரியம் முடியாது. ஆயினும் சண்டைநடந்தாலும்

மிகப் பெரிய சண்டையாக வெகு நாட்கள் நடைபெறும் போலிருக்கின்றதே" என எண்ணுகிருன் இவ்வாறெல்லாம் எண்ணிய அனுமான் இலங்கையின் கோட்டைவாயிலை அடைந்து உள்ளே செல்லும் வழியைப்பற்றி யோசிக்கின்ருன். இராமனின் தேசமாகிய கோசலத்தில் வாயில் கதவு அடைப்பதும் காவல் வைப்பதும் இல்லை. ஏனென்னில்!

கள் வாரிலாமையால் பொருள் காவலுமில்லை யாதும்
கொள் வாரிலாமையால் கொடுப்பாருமில்லைமாதோ

என்று கம்பன் காரணம் கூறுகிருன் இராவணன் தன் வீட்டிற்கும் காவல் வைக்கவில்லை "என்னைக்காட்டிலும் உலகத்தில் வீரனெகிடையாது. ஆகையால் எவர் வேண்டுமானுலும் இங்கு வரலாம் நான் பயபடவில்லை "என்ற ஆணவத்தின் காரணமாக ராவணன் காவல் போடவில்லை. இப்பேர்ப்பட்ட காவல் கட்டுப்பாடு இல்லாத வாயிலில் வந்த அனுமான் வாயில் வழி சேருவது பெரிதில்லை, ஆனுல் இராவணன் பார்த்து இந்த ஊருககு இதுவாயில் என்று வைத்திருப்பதால் இவ்வழியாக உள்ளே சென்ருல் இராவணனின் கட்டுபாட்டிற்கு அடங்கிய தாகிவிடும். ஆதலால் நான் மதிலைத்தாவி உள்ளே செல்கிறேன்" எனத்திர்மானித்து மதிலைத்தாவ முயற்சிக்கும் நிலையில் இலங்கையின் காவல் தெய்வமாகிய லங்கினி தோன்றுகின்ருள். இந்த அம்மையின் வருகையைக் கூறும் கம்பன் காவிய அலங்காரத்தில் ஏகபாதம் என்று ஒருலக்ஷணம் உண்டு; அந்த ஏகபாதம் மாதிரி நான்கு வரிகளிலும் ஒரேவார்த்தை வரப் பாடுகின்ருன்.

அம்மையின் பாலுண்ட கருணமூர்த்தியான ஞான சம்பந்தர்

பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்
பிரமபுரத்துறை பெம்மானெம்மான்

என்று ஏகபாதம் பாடுகின்ருர். கம்பன் சிறிது மாறுபட்டுப் பாடுகின்ருன். நான்குவரிகளிலும் அஞ்சுவணம் என்று வார்த்தை வரப்பாடுகிருன்.

அஞ்சுவர்ணத்தாலான பஞ்சவர்ணப்பட்டாடை உடுத்தியுள்ளாள். அரவு பயப்படும்படியான கருடன் (உவணம்) மாதிரி வேகமுடையவள். இரக்கமில்லாத அவள் அழகிய சுவர்ணத்திலான அங்கவஸ்திரம் தரித்திருக்கிருள். அழகிய (சங்கிலிருந்துண்டான முத்துக்களைக் கோர்த்து முத்தாரம் பூண்டிருக்கிருள் அந்த மோகனங்கி என்கிருன் கம்பன். (அம்: அழகிய சுவளத்தின் : நல்ல சங்கிலிருந்து உண்டான முத்தாரம். )

அஞ்சு வணத்திளுடை யுடுத்தாளரவெல்லாம்
அஞ்சு வணத்தின் வேகமி குத்தாளருளில்லாள்
அஞ்சு வணத்தின் உத்தரியத்தாளலேயாரும்
அஞ்சு வணத்தின் முத்தொளிராரத்தணி கொண்
[டாள்

அனுமனை நோக்கி அவள் "அடே! நில்! நில்!" என்ற கத்தலுடன் வருகிருள், அனுமனே, அவள்கூட எதிர் பாராததன்மையில் "வருக" என்று அவளை வரவேற்கிருன். "ஆஹா! பயமில்லே! என்னையா வரவேற்கிருய்! சரி! சரி! கேவலம் காய்கனி கிழங்கு சாப்பிடும் உன்னிடம் எனக்கு என்ன கோபம்! மதிலேத்தாவி உயிரை இழக்காதே! போ! போ! என்று மிரட்டுகிருள். "அம்மையே! ஏதோ இவ்வூரைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன். நான் உள்ளே சென்ருல் உனக்கு என்ன?" என்கிற அனுமனைக் கண்டு "அடே! போ வென்ருல் போகாது எதிர்த்தா பேசுகிருய்? திரிபுரம் எரித்த பரமசிவம் இவ்வூருக்குள் நுழைய முடியாதே! உன்னல் முடியுமா? நீயாரடா?" என்று கேலியாகச் சிரிக்கிருள். அனுமானும் சிரிக்கிருன். அவன் சிரிப்பது கண்டு "அடேய்! உன் உயிர் போவதன் முன் இவ்விடம் விட்டுப் போகப்போகிருயா என்ன?" எனமிரட்ட," அம்மணி!

இந்த ஊருக்குள் போகாமல் திரும்பிச் செல்லுவதில்லை என்று நிர்மானம்" என்று கூறி விடுகிருன். "இவன் குரங்கல்ல! சிரிப்பை பார்! சிரிப்பு! திரிபுரத்தை எரித்த சிவன் மாதிரி சிரிக்கிருன்" என எண்ணிய அரக்கி அனுமானை நோக்கித் தன் வேலாயுதத்தை விட்டுவிடுகிருள், தன்னை நோக்கி வரும் அவ்வாயுதத்தை அனுமான் இரண்டாக ஒடித்து விடுகிருன். அயர்ந்திருக்கும் வேளையில் அனுமானை குத்திவிடலாம் எனக் கை ஓங்கிய அவள் முதுகில் திடீரென்று அனுமான் தன்முஷ்டியால் குத்திவிடுகிருன். அவள் பூமிமீது விழுந்து புரண்டு சிறிது மூச்சு விடும் சக்தி பெற்றுப் பேசுகிருள். "ஐய! கேள்! பிரமன் உத்திரவின் பேரில் இவ்வூரைக் காத்துவரும் என் பெயர் லங்கினி. என்னை உயிருடன் விட்டுவிடு. உண்மையைச் சொல்லுகிறேன். கேள்! இந்த ஊரை எத்தனை காலம் காப்பாற்றுவேன் என்று பிரமனைக் கேட்டபோது என்றைக்கு ஒரு முரட்டுக் குரங்கு உன்னைத்திண்டுகின்றதோ அன்று என்னிடம் திரும்பி வந்துவிடு என்ருர். அப்படியே நடந்து விட்டது. அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பது உண்மை. தயவு செய்து இலங்கைக்குள் போ" எனக்கூறி மறைந்து விடுகிருள்.

*அன்னதே முடிந்ததையா அறம் வெல்லும் பாவந்*
*[தோற்கும்*
*என்று மீதியம்பவேண்டுந்தகைய தோயினி மற்*
*[றுன்ருல்*
*உன்னிய வெல்லாமுற்றும் உனக்கு முற்ருத*
*[துண்டோ*
*பொன்னகர் புகுதி என்று புகழ்ந்தவளிறைஞ்சிப்*
*[போனுள்.*

இலங்கை அதருமத்தின் உருவமான ஒரு கடலாக விளங்குகின்றது. பெரியபாற் கடலில் ஒரு சிறு துளிமோர் விழுந்தால் அவ்வளவும் தயிராகமாறி விடுமன்ருே! அவ்வாறே அதருமக்கடலான இலங்கையில் தருமத்தின் நிலையாக

அனுமான்புகுந்து தருமமயமாக அவ்வூரை மாற்றப் போகிருன் என்ருன் கவிஞன்.

"சீரியபாலின் வேலை சிறுபிறை தெளித்ததன்னுன்"

இலங்கையுள் ஒளி மிகுந்த மாடமாளிகைகளைக் கண்டு "ஆஹா! இந்த ஒளிமயமான இலங்கைக்கு எதிரில் சூரியன் கூட ஒளிகுறைந்து மின்மினி மாதிரியாகி விடுவான் போலிருக்கின்றதே! இந்த ஒளிகளின் காரணமாக இவ்வூரில் இருளே இல்லை. இருளேயில்லாத இவ்வூரில் எப்போதும் பகல் மாதிரியிருப்பதால்தான் ராட்சசர்கள் சஞ்சரிக்கின்ருர் போலும்! அதனுல்தான் அரக்கருக்கு இரவிலும் சஞ்சரிப்பவர் எனப் பெயர் வந்தது போலும்" என்று எண்ணுகிருன்.

மலர்களிலுள்ள தேனை உண்பதற்காக வண்டு ஒவ்வொரு மலராக உட்கார்ந்து மீண்டும் வேறுமலருக்குத் தாவுகிறது. ஆனல் வண்டு தேனை மாத்திரம் உண்ணுகிறதே தவிர மலரைச் சிதைப்பதில்லை. அழிப்பதில்லை. அதேமாதிரி அனுமான் ஒவ்வொரு விட்டிலும் வேறு எதையும் தீண்டாது சிதை இருக்கின்ருளா என்று மாத்திரம் அறிந்து அறிந்து வேறு வீட்டிற்குள் போகிருன். அனுமான் எல்லா இடங்களிலும் சிதையை இவ்வாறு தேடிச் செல்லுவதைக் கூறுகின்ருன் கவிஞன்.

ஆத்துறு சாலை தோறும் ஆனையின் கூடங் தோறும்
மாத்துறு மாடங்தோறும் வாசியின் பந்தி தோறும்
காத்துறுஞ்சோலை தோறும் கருங்கடல் கடந்த [தாளான்
பூத்தொறுந்தாவிச் செல்லும் பொறி வரிவண்டில் [போனுன்

அவ்வாறு இரவில் இலங்கையில் தேவியைத் தேடும் அனுமான் நடுச் சாமத்தில் திருமணம், புதுமனைபுகுதல் முதலான விழாக்கள் நடப்பதைக் காண்கிருன். அவ்வாறு செல்

லும் அனுமான் ஓரிடத்தில் பெருங்காற்ருல் ஒரு மண்டபத்திற்குள் இழுக்கப்படுகிருன். மீண்டும் ஒரு காற்றின் வேகம் அவனை வெளித்தள்ளுகின்றது. கும்பகருணமகாராஜர் ஓரிடத்தின் தூங்கிக்கொண்டிருக்கின்ருர். அவருடைய மூச்சு அனுமனை அந்த மண்டபத்திற்குள்ளும் வெளியும் தள்ளுவதுகண்டு அனுமான் கோபித்து கும்பகருணனை இராவணனே என ஐயத்துடன் பார்த்து "பத்துத் தலைகளும் இருபது கைகளும் இல்லை. ஆதலால் இவன் இராவணன் இல்லை" என்று ஐயம் நீங்கித் தனக்கு வந்த கோபமாகிய நெருப்பை அறிவு என்னுந் தண்ணீரினல் அவித்துக் கொண்டு "இவன் எவனுயிருந்தாலும் சரி! இன்னும் சிறிது நாட்களில் இறந்து விடுவான்" என்று அவ்விடத்தைவிட்டு நீங்குகிருன்.

> அவித்து நின்று'எவனுயினும்ஆக' என்று அங்கை
> கவித்து நீங்கிடச்சில பகலென்பது கருதாச்
> செவிக்குத்தேன் எனராகவன் புகழினைத்திருத்தும்
> கவிக்கு நாயகன் அனையவன் உறையுளைக் கடந்தான்.

கோபமாகிய நெருப்பை அறிவு எனுந் தண்ணீர் விட்டு அணைக்க வேண்டுமென்று கூறுவதன் மூலம் கோபத்தையடக்காதவன் அறிவு குறைந்தவன் எனச் சமத்காரமாகக் குறிப்பிடப்படுகிறது. அத்துடன் "செவிக்கு தேனென ராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்" என்று அனுமனின் இடைவிடாத ராமஜபநிலையையும் கூருமற்கூறி நாமும் அவ்வாறு ஜபம் செய்து கொண்டேயிருந்தால் அவன் அருள் பெறலாம் எனவும் கவிஞன் கூறுகிருன்.

கும்பகர்ணன் மாளிகை கடந்த அனுமன் விபீடணனின் மாளிகையை அடைந்து "குற்றமில்லாத நற்குணமுடைய ஒருவனும் இங்கு இருக்கின்ருன்" என்று மகிழ்ச்சியுடன் மற்ருெருமாளிகையை யடைந்து அங்குள்ள ஒரு மகா வீரனைக் கண்டு "இவன் இராவணனே? அல்லது சிவகுமாரனை முருகனே? அலட்சியமாகத் தன்னுடைய குகையில்

தூங்கும் சிங்கம் மாதிரியான இவன் யார்?" என்று யோசிக்கிருன். முருகன் அறிவும் அருளும் சேர்ந்த திருவுருவமன்ரு? அப்பேர்ப்பட்ட பிரம தேஜஸ் அந்த வீரனுடைய முகத்தில் ஒளி விட்டுப் பிரகாசிக்கின்றது. "இவன் யாராயிருப்பினும் சரி! இவனும் இளைய பெருமானும் சரியான ஜோடி. வெகுநாட்களுக்கு பிரமாதயுத்தம்தான்" என்று கூறுவதன் மூலம் அவன் மகாவீரனுகிய இந்திரஜித்தன் என்று நாம் அறியும்படி சூசனையுடன் அறிவிக்கிருன்

வளையும் வாளெயிற்றரக்கனே? கணிச் சியான்
[மகனே?
அளையில் வாளரியனையவன்யாவனே அறியேன்!
இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்
உளையவுள்ளபோர் உளதென உள்ளத்தின் உணர்ந்
[தான்

இந்நிலையில் நடுநிசி வந்து விடுகின்றது, "இரவு மணி இரண்டாயிற்று எரிந்து கொண்டிருந்த தெருவிளக்கின் திரி இறங்கி ஏறுகின்றது காவற்காரன் தூக்கத்தில் தன்னை மறந்திருக்கிருன். ஞானி, குற்றவாளி, பிறருடன் போட்டி போடுபவன், வாழ்க்கையில் நம்பிக்கையிழந்தவன் இவர்கள் தவிர மற்றவர்யாவரும் தூங்குகின்றனர்" என்று ஆங்கிலப் பேராசிரியனுகிய ஆலிவர் கோல்ட்ஸ்மித்தின் "ஓர் இரவின் வருணனை" (A City Night Piece) மாதிரியான தோரணையில் கம்பன் பாடுகிருன்.

கள் குடிப்பவர் முழக்கம் அடங்கிவிட்டது. கொட்டு முழக்குடன் காவல்புரியும் இராக்காவலரின் சத்தம்கூட மங்கிவிட்டது. நடுஜாமம் வரையும்வேலைசெய்யும்கொல்லர்களின் வேலையும் ஒய்ந்துவிட்டது. வெற்றி முரசங்களும், கல்யாண வீடுகளில் வாசிக்கப்படும் வாத்தியங்களும், கொடையாளிகளின் வீட்டில் கொட்டி முழங்கும் வாத்தியங்களும் அடங்கிவிட்டன.

வெரியுமடங்கின நெடுங்களி விளக்கும்
மாரியும் அடங்கின அடங்கியது பாடல்
காரியமடங்கினர்கள் கம்மியர்கள் மும்மை
தூரியமடங்கின துடங்கிய துறக்கம்

"தொடங்கிய துறக்கம்" என்ற வார்த்தையைப் படிக்கும் போது யாரோ ஒரு வீட்டில் குறட்டு விடுவதை நமக்கு மனக்கண் முன் காண்பதுபோல் தோன்றுகிறதல்லவா? இரவின் கொடுமையான அயர்ச்சியின் காரணமாக உறங்காத தேவரும் உறங்கினர்: தூங்காத யோகிகள் தம்மையறியாது தூங்கினர். சினம் மிக்க யானைகள்கூடத் தூங்கின. பைத்தியம் பிடித்தவன் தூங்கமாட்டானல்லவா? அவன் கூட இந்நடுநிசியில் தூங்குகின்றான். புல்லாங்குழல் போன்ற துணைக்கருவிகளின் இசையும் பாட்டும் அடங்கி விட்டன. வானமும் இமைமூடிக்கொண்ட மாதிரி இருள் கவிந்துகொண்டது. வீணையும் தாளவாத்தியமும் நின்றது. இலங்கையிலுள்ளவர்களின் கண்களின் இமைகள் என்னும் கதவுகள் மூடிக்கொண்டன. வீட்டுக்கதவுகளும் மூடப் பெற்றன.

பண்ணிமையடைத்தன பலகட் பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தன: விளைந்ததிருள்: வீணை
தண்ணிமையடைத்தன தழங்கிசை வழங்கும்
கண்ணிமையடைத்தனஅடைத்தன கபாடம்.

"அடைத்தன கபாடம்" என்று கூறும் போது வீட்டில் தாழ்ப்பாள் படார் என்று போடப்படுவது மாதிரி தோன்றுகின்றதல்லவா? அந்நடுநிசியில் இராவணன் அந்தப்புரத்தில் அவனால் கொண்டுவரப்பட்ட அனேக ஆயிரம் பெண்கள் அவன் மீது ஆசை கொண்டு வந்தவர்கள். தூக்கமில்லாது தவிக்கின்றார்கள். இராவணனுடைய கம்பிரத் தோள்களை எண்ணி ஏங்குவர். (மன்மதனுக்கு அஞ்சியோ அல்லது கண்ணை மூடிக் கொண்டிருந்து.) தற்செயலாக உறங்கி விட்டால் இராவணன் நம்மிடம் வந்து ஒருநல்லவார்த்தை

கூறினுன் என்று கனவாவது காண்போமா? என்று உள்ள மில்லாமலே உறங்கமுயலுகின்ருர் சிலர். இவ்வளவு பெண் கள் இராவணனை நினைத்து ஏங்கித்தவிக்க, காமமே உரு வான இராவணன் தன்னை அலட்சியப் படுத்தும் ஒருபெண், அதுவும் மாற்ருனுடைய மனைவியை எண்ணி ஏங்கும் விசித் திரத்தை என்னென்பது.! இவைகளை எல்லாம் பார்த்துச் செல்லும் அனுமான் ஓரிடத்தில் அழகிய கட்டிலொன்றில் ராஜகுல மாட்சிததும்பத் தூங்கும் ஒரு அம்மையைச் சீதை என்று எண்ணி "ஐயோ! தன் கணவனுக்கு துரோகம் செய்து அயலான் வீட்டில் நிம்மதியாகத் தூங்கும் இவள் சீதை என்ருல் இராமனின் கீர்த்திபோய்விட்டதே! இவளுடைய பெருமையும் போய் விட்டதே! இலங்கையையும் அழித்து நானும் அழிந்து விடுகின்றேன்" "என ஆத்திரமடைந்த அனுமான்" "சில லட்சணங்கள் சீதாதேவி மாதிரியே உள்ளன. தூக்கத்தில் இவள் புலம்பும் வார்த்தைகளைக் கேட்டால் கூடிய சிக்கிரம் இவள் கணவனும் இந் நகரும் அழிந்து விடும் எனத்தோன்றுகின்றதே" என எண்ணி "இவள் சீதையல்ல! இராமனைக் கண்ட கண்களுக்கு காமமே உருவான இராவணனைக் கண்டு ஆசை ஏற்படாது" என்று சமாதானமடைந்து விடுகின்ருன். இராமனைக்கண்ட கண்கள் வேருெருவரைக் காணுது என்ற இவ்வுரை "உனைக்கண்ட கண்கள் மற்ருென் றினைக்காணுவே" என்ற திருப்பாணுழ் வாரின் திருவாக்கை ஞாபகப்படுத்துகின்றது:

அனுமான் மண்டோதரியைக் கண்டு சீதை என்று சிறிது தடுமாற்றம் அடைந்து விடுகின்ருன். இராமகாவியத்தில் இதுதான் மிகப் பெரியவிசேடம். இராவணனும் வீரன். இராமனும் வீரன். மண்டோதரியும் உத்தமி. சீதையும் உத்தமி. இராமனின் தம்பிகள் உத்தமர் இராவணனின் தம்பிகளும் உத்தமர், இராமன் தந்தை சொற் கடவாத தனயன். இந்திரஜித்தும் தந்தை சொல் மீருதவன். இப்படி எல்லாப்பாத்திரங்களையும் ஒரேமாதிரி காட்டி முக்கிய பாத்திரங்களாகிய இராமனும் இராவணனும் மாத்திரம் நேர் எதிரிகள் என ஒரு விசித்திரமான நிலையை இந்த

ராமகதை தவிர வேறு எங்கும் காண இயலாது. அறம் என்றைக்கும் வெற்றியடைந்துவிடும் என்பதை காட்டுகிறது இவ்வழகிய இராமகாதை:

மண்டோதரியின் மாளிகையில் மற்ருருபுறம் பெரியதொரு மஞ்சத்தில் காமமே உருவாகத் தூக்கம் வராது புரண்டு புரண்டு தவிக்கும் இராவணனைக் கண்ட அனுமான் கோபந்தாங்காமல் "இவன் தோள் வலிமை என்ன செய்யும்! வாள் போன்ற கண்களையுடைய என் அம்மை சீதா தேவியை வஞ்சித்த துரோகியை என்கைகளால் அடித்துத்துகைத்து என் வலிமையை நான் காட்டவில்லை என்ருல் நான் இராமனின் அடிமையா? என்று கூறிக்கையை ஓங்கி இராவணனைத் தாக்க எண்ணும் நேரத்தில் திடீரென்று நிதானமடைந்து விடுகின்ருன். "எனக்கு வந்த கோபம் என்னேடு நிற்கட்டும். உத்தமியான சீதையைத் தூக்கி வந்த உலுத்தனை இராவணனை ஒரு குரங்கு கொன்றது என்ருல் என் இராமனின் ஜயகோதண்டத்திற்கல்லவா குறைவு! இராமனுக்கு புஜபலமில்லை. ஒரு குரங்குதான் இராவணனைக்கொன்றது என்று என் காரணமாக இராமபிரானுக்கு கீர்த்திகுறையவேண்டாம்" என்று அடங்கி விடுகிருன்

இற்றைப்போர் பெருஞ்சீற்றம் என்னேடு முடிந்திடுக
கற்றைப் பூங்குழலாளைச் சிறை வைத்த கண்டகனை
முற்றப்போர் முடித்தது ஒருகுரங்கு என்ருல் [முனைவீரன்
கொற்றப் போர்ச்சிலைத் தொழிற்குக் குறையுண்டா [மெனக் குறைந்தாள்

இவ்வாறு இராவணன் மாளிகையை விட்டு வெளிவந்த அனுமான் இலங்கை பூராவும் தேடியாகி விட்டது. சீதையைக் காண முடியவில்லை என வருந்துகிருன். "உத்தமியான என் அன்னையை உலுத்தனை இராவணன் கொன்று விட்டானே! அல்லது கொன்று தின்றுவிட்டானே! வேறு எங்கேயாவது சிறையிட்டிருப்பானே? ஒன்றும் தெரியவில்

லேயே! மீண்டுபோய் இராமனுக்கு என்ன சொல்லுவேன்! தேவியைக் கண்டுவருவேன் என்று எம்பெருமான் எண்ணியிருப்பான். அவருக்கு ஆறுதல் கூறும் சுக்ரீவனே சீதையை நான் கொண்டு வந்துவிடுவேன் என நம்பியிருப்பார். நான் இராமனிடம் எவ்வாறு திரும்பிச் செல்லுவது? இப்பரந்த இலங்கையில் நான் எங்கும் தேடியும் என் அம்மையைக் காண முடியவில்லையே! ஏன்! ஏன்! நான் ஏன் அழவேண்டும்! அயோக்யனான அரக்கனைப் பிடித்து அவன் வாயில் இரத்தம் வரும்படி அடித்து சீதை எங்கே என்று கேட்கிறேன். பிரபு! இராமா! இந்த இலங்கையில் என் கையால் தீ வைக்கமாட்டேனா என்று பிரலாபிக்கிறான்.

வல்லரக்கன் தனைப்பற்றி வாயால் செங்குருதிவரக்
கல்லரக்கும் கரதலத்தால் காட்டென்று காண்கேனே
எல்லரக்கும் அயிலார்வேல் இராவணனும் இவ்வூரும்
மெல்லரக்கின் உருகிவிழ வெந்தழல் விட்டேகேனே

"Ask, it shall be given: Knock it shall open: "கேள் கொடுக்கப்படும்": "தட்டு திறக்கப்படும்" என்கிறது கிறிஸ்தவ வேதம். அனுமான் இலங்கையில் தீ வைக்க ஆசை என்பதை வெளியிட்டவுடன் அந்த எண்ணத்தை கருணை மூர்த்தியான இராகவன் நிறைவேற்றி விடுகிறான்போலும்!

அவ்வாறு பலவிதமாக எண்ணிய அனுமான் பக்கத்திலிருக்கும் ஒரு பூஞ்சோலையைக் காண்கிறான். அங்கும் சீதையைத் தேடுவோம். அவள் அங்கு இல்லாவிட்டால் இலங்கையை அழித்துவிடுவோம் என்ற எண்ணத்துடன் அந்த சோலைக்குள் அனுமான் புகுந்ததும் தேவர்கள் மலர் மாரி பொழிகின்றனர்! ஏனெனில் அதுதான் சோகமயமான சீதா பிராட்டியார் சிறையிருந்த அசோகவனம்!

## 4. அற்பனின் சிறையில் கற்பின் செல்வி

ஒரு தேசத்தில் மழையில்லாது மக்கள் வருந்தினர். மத குரு பிரார்த்தனை செய்து "இந்த தேசத்து அரசன்

தனக்கு மிகவும் பிரியமான ஒருவரை நரபலியாக அளித்தால் தேவதைகள் திருப்தியடைவதால் மழை பொழியும்" எனக் கூறினர். அத்தேசத்து அரசனுக்கு அழகிய ஒரு மகன் உண்டு. அரசன் தனக்கு அந்தக் குழந்தை மிகவும் பிரியமானவன் எனக்கூறி அக்குழந்தையை பலி கொடுக்க இணங்குகின்றான். குழந்தையை பலியிடுவதற்கு ஏற்பாடுகள் நடக்குமிடத்திற்கு அலறிக்கொண்டு அந்தக் குழந்தையின் அன்னையான அரசி ஓடோடி வருகின்றாள். குழந்தையை பலி பீடத்தில் வைத்து வாளை ஓங்கும் நேரத்தில் அவள் ஓடி வந்து "என் அரசனுக்கு நான்தான் பிரியமானவள். என் கண்மணியான அந்தக் குழந்தையல்ல" (Me, not my darling No!) எனக் கூறிக்கொண்டு குழந்தைக்கும் வாளுக்கும் இடையில் அரசன் எவ்வளவோ தடுத்தும், மீறித் தலையைக் காட்டித் தானே பலியாகி விடுகிறாள். அரசனுக்கு மிகவும் பிரியமானவள் அரசியே என்ற உண்மை வெளியாவதுடன் மழையும் பொழிந்து நாடும் செழிப்படைகிறது என்று ஆங்கிலத்தில் ஒரு கதை உண்டு.

தன் குழந்தையைக் காப்பதற்காகத் தானே பலியாகி விட்ட அன்னையின் எல்லையில்லாத அரும்பெருங் கருணையை நாம் காண்கிறோம். இதே மாதிரி உலகவாழ்வு என்னும் குழியில் விழுந்து தத்தளிக்கும் நம்மைக் காப்பதற்காக நம் அன்னையாகிய திருமகள் தன் பெருங்கருணையால் தூண்டப்பெற்றுத் தானும் ஒரு சாதாரணப் பெண்மணியாகப் பிறந்ததுமில்லாமல் அரக்கனுடைய சிறை வைப்பில் தவிக்கும் தியாக சீலத்தைக்கண்டே பெரியோர்கள் இராமாயணத்தை "மகத்தான சீதையின் காதை" என்கின்றனர். இதுபற்றிய ஸ்ரீவசன பூஷணமும் "இராமாயணம் சிறையிருந்தவளின் ஏற்றம் கூறுகிறது" என்று பேசுகிறது. உலகமாதாவான பிராட்டியாரை உலுத்தனான இராவணனின் அசோகவனத்தில் சிறையிருந்த நிலையை இவ்வத்தியாயத்தில் காண்கிறோம்.

மெல்லிடையாளான சீதா பிராட்டி அரக்கர் சிறைவைப்பிலிருந்த காலையில் கவலையால் இளைத்து தன் இடைபோல்

உடல் பூராவும் இளைத்துத் துரும்பாகி விட்டாள். கண்களை மூடித்திறப்ப தேயில்லை என்ருல் தூங்கிஞள் என எப்படிக் கூறுவது? வெயிலில் ஏற்றப்பட்ட விளக்கு மாதிரி ஒளி யிழந்த அந்த அம்மை, மயில் போன்ற சாயலுடையவள், மான்போன்ற மருண்ட பார்வையுடையவள், குயில் போன்ற குரலினள் அழகிய ஒரு பெண்மான் குட்டி புலிக்கூட்டத்தின் நடுவில் அகப்பட்ட மாதிரியிருக்கிருள் அவள்,

விழுதல்: விம்முதல்: மெய்யுற வெதும்புதல்:
[வெருவல்
எழுதல்: ஏங்குதல்: இரங்குதல்: இராமனை எண்ணித்
தொழுதல்: சோருதல்: துளங்குதல்-துயருழந்
[துயிர்த்தல்:
அழுதல்: அன்றிமற்று அயல் ஒன்றும் செய்குவதறி
[யாள்.

கரியமேகம். கண்ணுக்கிடும் மை போன்றவைகளைக் காணும் போது கரிய மேனியுடைய இராமனை எண்ணிக் கண்ணீர் விடுகிருள். அவள் கண்ணீர் அவளுடைய சேலையை நனைத்து ஈரமாக்கி விடுகின்றது. சிறிது நேரங்கழித்து கண்ணீர் நிற்க, இராமனை நினைத்து நினைத்துப் பெருமூச்சுவிடும் போது அந்தச் சேலை காய்ந்துவிடுகின்றது. அவ்வாறு ஈர மாகுவதும் காய்வதுமான ஒரு சேலையை அணிந்திருக்கின் ருள். கம்பன் பாலகாண்டத்தில் சீதையை தோற்றுவிக்கும் போது "அழகுத் தெய்வமான மன்மதன் சீதையின் திரு வுருவத்தை எழுத அமுதம் கொண்டு எழுத முயற்சித்து முடியாது திகைத்தான்"

"ஆதரித்து அமுதில் கோல்தோய்த்து அவையவம்
[அமைக்கும் தன்மை
யாதெனத் திகைக்குமல்லால் மதனற்கும் எழுத
[வொண்ணு சீதை"

என "மிதிலைக் காட்சிப்படலத்தில்" கூறினன். தற்சமயம் சுந்தரகாண்டத்தில் அதையே ஞாபகம்வைத்துக் கொண்டு பேசுவது போல். "அழகுத்தெய்வமான மன்மதன் அமுதம் கொண்டு எழுதிய சீதையின் திருவுருவம் முற்றுப்பெற்றிருந்தால், அவ்வழகிய சித்திரத்தில் புகைபடிந்தால் எப்படியிருக்குமோ அவ்வாறு புகைபிடித்த ஓவியம் போலிருந்தாள்" என்கிருன்.

"தேவு தென்கடல் அமுதுகொண்டு அனங்கவேள்
[செய்த
ஓவியம் புகையுண்டதே யொக்கின்ற உருவத்தாள்"

சீதையின் மனோ நிலையை இனி கவனிப் போம்.

"என்னுடைய ஏவலால் இராமபிரானைக்காணப் புறப்பட்ட இளைய பெருமான் அவரைச் சந்திக்கவில்லையோ! அப்படியே சந்தித்திருப்பினும் கடல் நடுவே இலங்கை யென்று ஒன்று உள்ளது என்றும் இலங்கையரசன் என்னைச் சிறைப்பிடித்துள்ளான் என்றும் அறியவில்லையோ? என்னை நடுவழியில் சந்தித்த ஜடாயுவையும் அரக்கன் கொன்று விட்டான். எனவே என்னைப் பற்றி இராமபிரானுக்கும் யாரும் கூறவே முடியாது. இனி என் நயகரை நான் இப் பிறப்பில் காணவே முடியாதோ என் று கலங்குகிருள். "இராமபிரானுக்கு யார் சோறு பரிமாறுவார்? விருந்தாளிகள் வந்து விட்டால் ஆண் மக்களாகிய அவ்விருவரும் எவ்வாறு உபசரிப்பார்? ஐயோ! என் மனநோய்க்கு மருந்து கிடையாதா?

அருந்து மெல்லட காரிட அருந்து மென்றழுங்கும்
விருந்த கண்ட போதென்னுறுமோ எனவிம்மும்
மருந்து முண்டுகொல் யான் கொண்ட நோய்க்
[கெனமயங்கும்
இருந்த மானிலஞ் செல்லரித்து எழவும் ஆண்டு
[எழாதாள்.

அவள் அமர்ந்திருந்த தரையில் கரையான் புற்றுவைத்தும் அம்மை எழவில்லை என்கின்றான் கவிஞன். "அரக்கர் சீதையை இது வரையும் உயிரோடுவைத்திருக்கமாட்டார், தின்றிருப்பர். என்ன செய்யலாம்? அறியாது எவராது குற்றம் செய்தால் அதைப் பொறுத்தல் பொறை. அந்த குணம் அயோத்தி அரசருக்கு உண்டு. அம்முறையில் இராவணன் மீது கோபங் கொள்ளாமல் பொறுமையை வகிந்து விட்டு வாளாயிருக்கின்றாரோ? நம் தம்பியை மனம் நோகப் பேசிவளான இச்சிதை அறிவில்லாதவள் என எண்ணி என்னைகை விட்டு விட்டாரோ? என்றெல்லாம் எண்ணி ஏங்குகிறாள்.

"இந்த அரசை நீ ஏற்றுக் கொள்ளவேணும்" எனத் தந்தையாகிய தசரதர் கூறியது கேட்டு மகிழவில்லை." "இவ்வரசைத்துறந்து நீ காடு செல்" எனக் கைகேயி கூறிய காலத்தில் இராமனின் முகம் துக்கத்தையும் காட்ட வில்லை. சித்திரத்திலே எழுதப்பட்ட தாமரையை ஒத்திருந்ததாம்

மெய்த்திருப்பதம் மேவென்ற போதினும்
இத்திருத்துறந்தே கென்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினையுன்னுவாள்.

இப்படி சுகத்தையும் துக்கத்தையும் ஒன்றாக எண்ணி அனுபவிக்கும் இராமனின் குணத்தினழகையும் அன்னவனின் அழகிய முகத்தையும் எண்ணி ஏங்குகின்றாள் அம்மை சிதை. ஆங்கிலத்திலே இந்த அரிய குணத்தை (Sublimity) என்பர். சிவதனுசை யொடித்த அவ்விராமனின் பருத்த தோளை எண்ணி வெதும்புகிறாள். முன் பினனறியாத வேடனாகிய குகனை "என் தம்பி உன் தம்பி! நீ தோழன்! இந்தச் சிதை உன் மதனி" எனக் கூறிய நட்பின் பெருமையுடைய நாயகனை எண்ணி ஏங்குகிறாள்.

ஆழநீர்க்கங்கை அம்பிகடாவிய
ஏழை வேடனுக் கெம்பிநின் தம்பி நீ

தோழன் மங்கை கொழுந்தி எனச் சொன்ன
வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்.

இதே கருத்தை திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமொழியில் "ஏழை ஏதுமற்றவன் கீழ்ச்சாதியான் என்று எண்ணாமல், குகனிடம்" நீ தோழன்; இளையவன் உன் தம்பி: என் மனைவியும் உனக்கு உறவினள்" என்று கூறியது கண்டு நானும் ஏழை, ஏதலன், கீழ்மகன் என உன்னைச் சரணாகதியடைந்தேன். என்னைக் காத்தருள வேண்டுகிறேன்" என்கிறார்.

ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவர்க்கு இன்னருள் சுரந்து
"மாழை மான்மட நோக்கி உன் தோழி
உம்பி எம்பி" என்று ஒழிந்திலையுகந்து
"தோழன் நீ எனக்கு இங்கு ஒழி" என்ற சொற்கள்
வந்தடியேன் மனத்திருந்திட
ஆழி வண்ணநின் அடியிணையடைந்தேன்!
அணிபொழில் திரு அரங்கத்தம்மானே.

திருமங்கையாழ்வார் 5/8/5

நாடாள வேண்டிய தினத்திலே காடு செல்லப் புறப்பட்ட போது சடாமகுடம் கட்டிக் கொண்டதையும், தன் கல்யாணத்திற்குப் பின் அயோத்தி நோக்கி வரும்போது பரசுராமனை ஜயித்ததையும் எண்ணி ஏங்கிக் கண்ணீர் விடுகிறாள்.

இராமபிரான் காட்டிற்குச் செல்லப் புறப்பட்டபோது ஒரு அந்தணர் எதிரில் வந்தாராம். "இராமா! என் கையிலிருக்கும் இந்தக் கம்பைச் சுழற்றி வீசுகிறேன். அதுவரை எனக்குப் பசுக்களை நிறுத்தி தானம் செய்து பின் காட்டிற்குப் போகலாம்" எனக் கூறினாராம். இராமபிரான் அவ்வாறே ஒப்புக்கொள்ள அந்த அந்தணர் தன் கைத்தடியைச் சுழற்றி வெகு தூரத்தில் எறிய அத்தடி விழுந்த

இடம் வரை இராமன் அவருக்குப் பசுக்களைத் தானம் செய்து அவ்வந்தணரின் பேராசை கண்டு சிரித்தனன். அன்று அந்தப் பெருமான் சிரித்த சிரிப்பையும் அப்பெருமானின் கொடைத் தன்மையையும் எண்ணி ஏங்கி இன்று அழுகிருளாம் சிறையிருந்த செல்வி.

பரித்த செல்வம் ஒழியப்படரு நாள்
அருத்தி வேதியற்கான் குலமீந்தவர்
கருத்தினுசை கரையின்மை கண்டிறை
சிரித்த செய்கை நினைத்தழுஞ் செய்கையாள்

இவ்வாறு வருந்தும் சீதா பிராட்டியின் சந்திரன் போன்ற முகத்தை விழுங்கும் ஒரு பெரிய பாம்புபோல் அந்த அம்மையின் கேசம் ஒரே சடையாக மாறியிருக்கின்றது. அம்மை தன் தலையில் தைலந்தடவி நீவிவிடாததன் காரணமாக தலையிலுள்ள கேசம் கட்டிப்போய் ஒரே சடையாக மாறிவிட்டது என்பது குறிப்பு. (இதே சடையைத் தன் கழுத்தில் சுற்றிச் சுருக்கிட்டுக்கொண்டு தற்கொலை செய்துகொள்ள முயன்றதால் இந்தச்சடை சீதா பிராட்டியின் உயிரைக் குடிக்க வந்த பாம்பு என்று கூடக் கூறலாம்.) அவ்வாறு துயரத்தில் துடிக்கும் பிராட்டியாருக்கு ஆறுதல் கூறிக் கொண்டு அருகிலிருந்தவள் திரிசடை (முச்சடை) என்னும் உத்தமியான ஒரு அரக்கர் குல மங்கை. இராவணன் தம்பியான விபீஷணனின் மகள். சீதாதேவியும் திரிசடையும் பேசும் விஷயங்களைப் பற்றிக்கூறும் இவ்வத்தியாயத்திற்கு "ஒரு சடையும் முச்சடையும்" என ஒரு ஆசிரியர் மகுடமிட்டு எழுதியுள்ளார்.

இன்று சீதாபிராட்டியார் திரிசடையை நோக்கிப் பேசுகிருள். "தோழி! எனக்குக் கூட இனி நல்லகாலம் வரப்போகின்றதா? இன்று எனக்கு இடது பக்கம் துடிக்கின்றதே. விஸ்வாமித்திர முனிவரும் எனது நாயகரும் இளையவரும் மிதிலை வந்த அன்றையதினம் இன்றுபோல் எனக்கு இடந் துடித்தது. ஏன்! மறந்தே போய்விட்டேனே! தருமமூர்த்தி

யான எனது நாயகர் தன் அரசைத்தம்பிக்குக் கொடுத்து எங்களுடன் காட்டிற்குப் புறப்பட்டாரே, அன்று என் வலம் துடித்தது. அதுதான் இவ்வளவு கவலைகள் எனக்கு ஏற்பட்டன போலும்" என்கிருள்.

மறந்தனன் இதுவும் ஓர் மாற்றங் கேட்டியால்
அறந்தரு சிந்தை என் ஆவி நாயகன்
பிறந்த பார்முழுவதும் தம்பியே பெறத்
துறந்து கான்புகுந்த நாள் வலந்துடித்ததால்

பெண்களுக்கு இடந்துடித்தலும் ஆணுக்கு வலந்துடித்தலும் நன்மை யென்பர். மலையத்வஜ பாண்டியன் மதுரையில் புத்திரகாமேஷ்டியாகம் செய்யும் காலத்தில் பாண்டியனுக்கு வலமும் காஞ்சனதேவி யென்னும் அன்னவனின் மனைவிக்கு இடமும் துடித்தன.

வள்ளல் மலத்துவச மினவன் வலத்தோள்
துள்ள: மனை காஞ்சனை சுருங்கிய மருங்குல்
தள்ள: எழு கொங்கைகள் ததும்ப நிமிர் தீம்பால்
வெள்ள மொழுகக் கரிய வேற்கணிடனுட.

என்று பரஞ்சோதி மாமுனிவர் கூறிப்பாண்டியனுக்கும் பாண்டிமாதேவிக்கும் வலம், இடந்துடித்து மீனுக்ஷி அம்மையின் வருகைக்கான நற்சகுனங்கள் தோன்றின என்கிருர்.

இவ்வாறு கூறிய சீதையிடம் "தேவி! உன்முகத்தில் அசாதாரணமான ஒளி ஒன்று உண்டாகியுள்ளது. உன் காதிற்கு நேராக ஒரு பொன் வண்டு ஊதிச் செல்லுகின்றது. ஆகையால் நீ காதிற்கினிய ஏதோ சமாசாரத்தை கேட்கப் போகின்றுய் எனத் தோன்றுகின்றது. அம்மனி! நான் தூங்கவில்லை. ஆகையால் கனவென்று கூற முடியாது. காட்சி எனக் கூடக் கூறலாம். உடல் பூராவும் எண்ணெயைப் பூசிக் கொண்டு சிவந்த ஆடையை அணிந்து கொண்டு கழுதையும் பேயும் பூட்டப்பட்ட தேரில் ஏறிக் கொண்டு

மக்கள் சுற்றத்தார் யாவருடனும் இராவணன் தென் திசை நோக்கிச் சென்றான். மண்டோதரியின் கூந்தல் தீப்பிடித்து எரிந்தது. தேவி! இன்னும் கேள்! ஒரு காடு. அக்காடு பூரா வும் மதம் பிடித்த யானைகளின் கூட்டம். அந்த இடத்திற்கு இரண்டு சிங்கங்களின் தலைமையில் ஒரு புலிக் கூட்டம் வந்து அங்கிருந்த யானைகள் பூராவையும் கொன்று விட்டன. யானைகளினிடமிருந்து ஒருமயில் அந்த சிங்கங்களினிடம் போய்ச் சேர்ந்து கொண்டது.

வரம்பிலா மதகரி யுறையு மவ்வன
நிரம்புற வளைந்தன நெருக்கி நேர்ந்தன
குரம்பறு பிணம்படக் கொன்ற மாறிலாப்
புரம்புக விருந்த தோர் மயிலும் போய தால்.

[இராமலட்சுமணர்களாகிய சிங்கங்கள் புலிக்கூட்டங்கள் போன்ற வானர வீரர்களை யழைத்து வந்து மதம் பிடித்த யானைகளாகிய அரக்கரை அழித்து சீதையான மயிலை விடு வித்தனர் என்பது குறிப்பு.] அவ்வாறிருக்க மேலும் கனவு கண்டேன். ஆயிரக்கணக்கான தீபங்களால் அலங்காரம் செய்யப்பட்ட இராவணன் அரண்மனையிலிருந்து அழகிய விளக்கொன்றைக் கையில் எடுத்துக்கொண்டு திரு மகளான லட்சுமி தேவி வெளிவந்து விபீடணன் வீட்டிற்குள் சென்றாள். தேவி! திருமகள் விபீடணன் வீட்டிற்குள் சென்றதைக் கனவில் கண்டபோது உனக்கு இடந்துடிப் பதாக எழுப்பிவிட்டாய். ஆகையால் அந்தக் காட்சி முடி வடைய வில்லை" எனக் கூறுகிறாள்.

சாதாரண விஷயம் ஒன்றைப் பேசிக் கொண்டிருந்தால் பாதியில் நிறுத்தினால் ஒப்புக் கொள்ளமாட்டார் மனிதர். ஏதாவது ஒரு சஞ்சிகையில் மிக மிக ஆர்வத்துடன் ஒரு தொ டர்கதை படிக்கும் வாசகருக்குச் ஒரு வாரத்துச்சஞ்சிகையின் இதழ் கிடைக்காவிடில் துடித்து விடுகிறார் அன்றோ! அப்படி யிருக்கத்தன் வாழ்க்கையை பாதிக்கக் கூடிய ஒரு விஷ யத்தை, அதுவும் தனக்கு அனுகூலமான செய்தியைக்

கனவு கண்டு கொண்டிருந்த அந்தத்திரிசடையைத் தானே எழுப்பிக் கனவைக்கலைத்து விட்டதாக திரிசடை கூறும் போது சீதையின் ஆவல் உச்சநிலையடைந்து ஒரு குழந்தை மாதிரி, "திரிசடே! அந்தக் கனவின் குறையைக் கண்டு எனக்கு மறுபடியும் சொல். தயவு செய்து கனவு காண்பதற்காக மறுபடியும் தூங்கு" என்று கை கூப்பி வேண்டுகிறாள்.

பொன்மணிபுக்க அப்பொருவில் போதினில்
என்னை நீ உணர்த்தினை முடிந்ததில் லெனா
அன்னையே அதன் குறை காணென்றுயிழை
இன்னமுந்துயில் கென இருகை கூப்பினாள்.

தூங்க ஆரம்பித்தால் கலைந்த கனவு மறுபடியும் தொடர்ந்து காண முடியும் என்று நினைக்கும் பிராட்டியாரின் குழந்தை போன்ற நம்பிக்கையைப் பாருங்கள்!

இவ்வாறு திரிசடையும் சிதையும் பேசிக் கொண்டிருக்கும் இடத்திற்கு அனுமன் வந்து அரக்கிகளின் கூட்டத்தைக் காண்கின்றான். வயிற்றில் வாயுடையர், வளைந்த நெற்றியுள்ளோர், கொடிய பார்வையுடையவர், பல்லிடுக்கில் யானை, யாளி, பேய் முதலானவை தூங்குவதற்கு ஏற்ற வாயுடையர். பத்துக்கையுடையவர். ஒரு தலையுடையவர், இருபது தலையும் இரண்டு கையும் உடையவர். யானை, குதிரை, வேங்கை, கரடி, சிங்கம், நாய் போன்ற முகத்தையுடையவர். கன்னங் கரிய ராட்சசிகளுக்கு நடுவில், மேகத்தின் நடுவில் தோன்றும் மின்னல் போன்று இடைரேன்று சீதா பிராட்டியைக் காண்கிறான் அனுமான்.

விரி மழைக் குலம் கிழித்து ஒளிரும் மின்னெனக்
கரு நிறத்தரக்கியர் குழுவில் கண்டனன்
ஒரு நிறத் தொருதனிக் கொண்டல் ஆமென
அரு நிறத் தழகனுக்கமைந்த காந்தையை

ஆஹா! யார் இவர்! இராமன் கூறிய அடையாளங்கள் பூராவும் அவ்வாறே இருக்கின்றன. ஓஹோ! இராவணு! இராமபிரானுடைய உயிரை இங்கேயா ஒளித்து வைத் திருக்கிருய்? ஆஹா! தர்மம் அழியாது. நானும் அழிய மாட்டேன்! தேடினேன்! கண்டேன் தேவியை! என ஆடிப் பாடி அகமகிழ்ந்து ஓடி உலாவுகிருன் அனுமான்.

வீடினதன்றறன் யானும் வீகலேன்
தேடினேன் கண்டேன் தேவியே என
ஆடினன் பாடினன் ஆங்கும் ஈங்குமாய்
ஓடினன் உலாவினன் உவகைத்தேனுண்டான்.

தன் உயிரை இராவணன் அழித்துக் கொள்ள நல்லவேலே செய்தான். ஆம்! இராமனேக்கண்டேன்.,அவன் நாராயண மூர்த்தி என அறிந்தேன். இன்று இவ்வம்மையும் கமலத் தில் வீற்றிருக்கும் செல்வியான மகாலட்சுமியெனத் தெரிந்து கொண்டேன். ஆஹா! அரக்கர் சிறைவைப்பிலி ருந்தும் தன்னுடைய பரிசுத்தம் பாழ்படாதிருக்கும். இவரு டைய மனத்தின் உறுதியை புகழ்வேனே! இம்மகா உத்தமியை உலகிற்கு அளித்த ஜனகமகாராசனுடைய வம்சத்தைப் புகழ்வேனு! எப்படிப் புகழ்வேன்? யாரைப் புகழ்வேன்?

புனேகழலிராகவன் புயத்தையோ புகழ்!
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ!
வளேகழலரசரின் வண்மை வீக்கிடும்
சனகர்தம் குலத்தையோ யாதைச் சாற்றுகேன்!

நெருப்புக்கு நடுவிலும், தண்ணீருக்கு நடுவிலும் நின்று தவஞ்செய்பவர் இருக்கட்டும். பெண்மையின் மனவுறுதி யினுல் ஏற்படும் விளேவு கூற முடியாதது! இராமபிரான் இந்த அருமையான காட்சியைக் கண்டால் எவ்வளவு மகிழ்ச்சியடைவார்? ராம, ராம, என்று அவருடைய நாமம் கூறும் எனக்கு இவ்வம்மையார் சிறையிருந்த செல்வியாக

விளங்கும் தவக்கோலத்தைக் காணும் பேறு அந்த ராம நாம மகிமையால் கிடைத்தது. ஆனால் தாமரைக்கண்ண னை அப்பெருமானின் கண்களுக்கு இந்தக்காட்சி கிடைக்க வில்லை. கண்கள் தாமரைபோல் அழகாக இருந்து என்ன பயன்! இவ்வழகான காட்சியைக் கண்ட கண்கள் அல்லவா புண்ணியம் செய்த கண்கள்! இராமன் அதற்குப் புண்ணியம் செய்யவில்லையா. ஆஹா! இவ்வம்மையை காப்பாற்றுகிறது யார்? தருமமா? ஜனகன் செய்த புண்ணியமா? கற்பின் காவலா? அருமை! அருமை! என் போன்றவரால் உரைக்க முடியாத பெருமை!

> தருமமே காத்ததோ! சனகன் தன்வினைக்
> கருமமே காத்ததோ! கற்பின் காவலோ!
> அருமையே! அருமையே! யாரி தாற்றுவார்!
> ஒருமையே எம்மனோர்க் குரைக்கற் பாலதோ!

என்று அனுமான் சந்தோஷத்தில் ஆடிப்பாடி அகமகிழ்ந்து பூரித்திருந்த நிலையிலே எவரும் எதிர்பாராத நேரத்தில் சீதையிருந்த அசோக வனம் நோக்கிப் பிரமாதமான திபா லங்காரங்களுடன் ஒரு பெரிய ஊர்வலமே வருகின்றது! ஆம், சீதா தேவியைக் காண்பதற்கு அந்நடு நிசியில் இரா வணன் தோன்றுகிறன் என்கிறன் கம்பன்.

"துன்று பூஞ்சோலைவாய் அரக்கன் தோன்றினன்"

## 5. வீரன் மனைவியின் வீரவாசகம்.

தேவமாதாகிய ஊர்வசி உடைவாள் கொண்டுவர, மேன கை தாம்பூலத் தட்டம் ஏந்திவர, திலோத்தமை காற்செருப் பைத் தாங்கிக் கொண்டு பின்னல் ஓடிவர உலக பயங்கர னை இராவணன் சீதாபிராட்டியிருக்கும் அசோகவனத்தை யடைகிறன். எட்டுக் கோடிப் பெண்கள் நெய்விளக்கு ஏந்தித் தொடர அந்நடுநிசி இருள் நீங்கிப் பகலாகிவிடு கிறது. "நடு சாமத்திலே திடீரென்று இராவணன் புறப்பட்டு ஆர்ப்பாட்டங்களுடன் வருகின்றனனே! அசோகவனத்திற்

குத்தானே? என்ன கோபமோ? எங்கு செல்லுகிருனே? இந்தக் கோபம் எதில் போய் முடியுமோ?" எனத் தேவர்கள் நடுங்குகின்றனர்.

இராவணன் வருவது கண்டு சிறையிருந்த செல்வியாம் சீதை "ஐயோ! இவன் வருகின்ருனே! என்னென்ன தகாத வாசகங்களைக் கூறுவானே? அவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கும் விதி நமக்கு நேர்ந்து விட்டதே" என எண்ணிக் கூச்சமடைந்து உயிர் குலைந்து நடுங்குகிருள்.

இராவணனே "ஆசைவசப்பட்டு இவளிடம் கெஞ்சப் போகின்றேனே. இவள் என்ன சொல்லுவாளோ" என ஏங்கி வருந்துவதன் காரணமாக உயிர் குலைந்து நடுங்கு கின்ருன்.

இவ்விருவரும் சந்திக்க நேரும் போது என்னென்ன பேசுவார்களோ, என்ன நடக்குமோ என எண்ணி உளைந்து அனுமான் நடுங்குகின்ருன்.

> கூசி ஆவி குலைவுறு வாளையும்
> ஆசையால் உயிர் ஆசழிவானையும்
> காசில் கண்ணினை சான்றெனக் கண்டனன்
> ஊசலாடி உளையும் உளத்தினன்.

நவவியாகரணபண்டிதனுகிய அனுமான் இராவணன் வரு வது கண்டு சீதை கூச்சமடைவதால் தன்பரிசுத்தம் பாழ் பாடாதிருக்கின்ருள் என எண்ணி மகிழ்கிருன். "அன்னையே! அரக்கனுடை சிறைவைப்பில் இருந்தும் பரிசுத்தமாயிருக் கும் நீ நீடூழி வாழவேண்டும்! உத்தமியான உன்னை மனை வியாக அடைந்த பாக்கியவந்தனை இராமன் வாழ வேண்டும்! உங்களிருவருடைய பெருமையை ஓதும் நான்கு வேதங்களும் வாழ்க! அவற்றை ஓதும் அந்தணர் பெரு மக்கள் வாழ்க! அதன்காரணமாத்தருமம் வாழட்டும்" என்று சீதாபிராட்டியின் செம்மை காரணமாக தருமம் வாழ்ந்து, தருமவழி வாழும் மக்கள் யாவரும் வாழுமாறு வாழ்த்தி அவ்வம்மையை வணங்குகிருன்.

வாழி சானகி! வாழி இராகவன்!
வாழி நான்மறை! வாழியர் அந்தணர்!
வாழி நல்லறம்! என்றுற வாழ்த்தினன்
ஊழி தோறும் புதிதுறுஞ் சீர்த்தியான்.

உத்தமி ஒருத்தியின் ஒழுக்கங்கண்டு உலகத்தையே வாழ்த்துகின்றான் அனுமான். சீதாதேவியின் இருப்பிடம் வரும் இராவணன் கேவலம் ஒரு பெண்ணிடம் நாம் போய் மண்டியிட்டுக் கெஞ்சுகின்றோமே என்ற வெட்கமும் அந்த வெட்கத்தை மறைக்கமுடியாதபடி ஆசை தூண்டக் கூசிப் பேச ஆரம்பிக்கிறான். வெள்ளையான பால் போன்ற நிறத்துடன் கூடிய ஒரு விஷதிரவத்தைப் பாலென்று எண்ணிக் குடிக்க ஆசைப்படும் குழந்தை மாதிரி! தன் வம்சத்தையே நாசம் செய்யப் போகும் சீதையை விஷமென்று அறியாமல் அமுதம் என்று எண்ணி இராவணன் வேண்டுகின்றான். "தேவி! இன்று, நாளை என்று நாட்கள் கடந்து கொண்டேயிருக்கின்றனவே! நான் இறந்த பின்னர் தான் உனக்கு என்மீது இரக்கம் வருமா? நாளாக நாளாக நம்மிருவருடைய யௌவனமும் விறைகி விடுமே! சென்ற இளமை திரும்புமோ? சீதாலட்சுமணா எனப் பெருங்குரலுடன் அலறி இராமன் இறந்ததை நீயறிந்தும் இராமன் உன்னை விடுதலை செய்யவருவான் என மனப் பால் குடிக்கிறாயா? அப்படியே இராமன் உயிரோடிருந்து இங்கு வந்து என்னைக் கொன்று உன்னை மீண்டும் மனைவியாக அடைந்தால் கேவலம் ஒரு சாதாரண மனிதனின் மனைவியாகத்தானே வாழ வேண்டும்? என்னை நாயகனாக நீ ஏற்றுக் கொண்டால் உலகின் தலைவர்களான தேவர்களின் மனைவியர் உன்திருவடி வணங்கும் பெரிய இன்பத்தில் உன்னை வைத்து விடுவேன்! தேவி! நீ தயவு செய்து என் இச்சைக்கு இணங்கவேண்டும். இதை மறுக்காதே! மூவுலகின் அரசியாகத் திகழும் போகத்தை வேண்டாமெனத் தள்ளலாமா?

தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தாவின் மூவுலகின் தனிநாயகம்

மேவுகின்றது நுன்கண் விலக்கினை
யாவரேழையர் நின்னின் இலங்கிழாய்

தேவி! என்னை நாயகனுக ஏற்றுக் கொள்!" என்று சிதா பிராட்டிமுன் விழுந்து வணங்குகிருன்.

பழுக்கக் காய்ச்சப்பட்ட சூட்டுக்கோல் போன்ற இவ்வார்த்தைகள் காதுகளில் படுவதற்குள் காதுகள்சுட்டு விட்டன. மனம் பேதலித்து விட்டது. கண்கள் கண்ணீர் விடவில்லை! புண்ணீராகிய ரத்தமே வந்து விட்டது! தான் பெண் என்பதையே மறந்து விட்டாள். ஒரு பெண்ணு இப்படிப் பேசினுள் என்று நினைக்கும்படி சிதை பேசு கின்ருள். சிதையை இராவணன் வஞ்சனையாக எடுத்து வரும் போது அன்னவனை நோக்கி.

மேருவைப் பறிக்க வேண்டில்: விண்ணினை இடிக்க
[வேண்டில்:
நீரினைக்கலக்கவேண்டில்: நெருப்பினையவிக்க
[வேண்டில்
பாரினைப்பிளக்க வேண்டின்: பலவினைசில சொல்!
[ஏழாய்!
யாரெனக் கருதிச் சொன்னுய்? இராவணற் கரிதோ?
[என்ருன்!

என்றபடி "இராவணனுல் முடியாதது உண்டோ" என்று கூறியவனுக்கு அவனுடைய வார்த்தையினுலேயே

மேருவை உருவ வேண்டில் விண்பிளந்தேக வேண்டில்
ஈரெழுபுவனம் மற்றும் முற்று வித்திடுதல் வேண்டில்
ஆரியன் பகழி வல்லது அறிந்திருந்து அறிவிலா
[தாய்!
சீரிய அல்ல சொல்லித் தலைபத்தும் சிந்துவாயோ!

"இராமபாணத்தாலும் முடியும்" என்று கூறும் அவள் நுண்ணறிவைப் பாருங்கள்! உலகத்தைத் துரும்பாகமதித்து

உதாசீனம் செய்யும் ஆணவ உருவமான இராவணனை "துரும்பே" என அழைக்கும் சீதாபிராட்டியின் வீர உணர்ச்சியின் வன்மைதான் என்னே!

"நீ பயந்தவன். ஆதலால் எனது நாயகன் இல்லாத நேரத்தில் வஞ்சனையாக மான் ஒன்றை ஏவி, மாயை செய்து மறைந்து வந்தாய்! உன்குலத்திற்கு எதிரியான இராமபிரான் நேரில் நின்றால் நீ நிமிர்ந்தாவது அவரை பயமின்றிப் பார்க்கமுடியுமா? உன் தலைகள் பத்தையும் விளையாட்டாக சீவித் தள்ளிவிடுவாரே! நீ போர்க்களத்திலேயே பார்! ஜடாயுவென்னும் ஓர் கழுகினால் நீ தோற்கடிக்கப்பட்டவன் அன்றோ? சிவபெருமான் கொடுத்த வாளை உபயோகப்படுத்தி ஜடாயுவை வென்றாய்! இல்லாவிட்டால் இறந்து போயிருப்பாய்! உனக்குக் கிடைத்த வரம் வாழ்வு முதலானவையெல்லாம் நீடூழி நிலை பெறவேண்டுமென்று யமனுக்கு பயந்துதானே வரம் வாங்கினாய்? இராமபாணத்திற்குஎன்று நீகுறித்துவரம்பெறவில்லை. ஆதலால் இராமபாணம்உன்னைச் சீக்கிரம் அழித்து விடும் என்பதில் சந்தேகமில்லை! இராவணா! சிவபெருமானிருந்த கைலையை நீ கையிலெடுத்தபோது உன்னை அப்பெருமான் தன் கால் விரலால் ஊன்றி அழுத்திய காலத்து அதைத்தாங்காது தவித்துத் தோற்றாய்! சிவபெருமானுடைய கால் கட்டைவிரலுக்குத் தோற்றுப் போன உனக்கு எனது நாயகன், அதே சிவபெருமானுடையவில்லைத்தன்கையில் எடுத்தபோது படீரென்று ஒடிந்து விழுந்த சத்தம் பதினான்கு உலகங்களிலும் கேட்டதே! உனக்கு இருபது செவிகளிருந்தும் விழவில்லையா?

குன்று நீ எடுத்த நாள் தன் சேவடிக் கொழுந்தால் [உன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரம் துரந்த [மேரு
என் துணைக் கணவன் ஆற்றற்கு உரனிலாதிற்று [வீழ்ந்த
அன்றெழுந்துயர்ந்த ஓசை கேட்டிலை போலும் [அம்மா!

'எட்டுத் திக்குகளிலும் உள்ள இக்கு பாலகர்களை ஜயித்தேன் கைலேயை எடுத்து விளையாடினேன்' என்றெல்லாம் பெருமை கூறும் நீ, கையில் வில்லை வைத்துக் கொண்டு என்னைக் காவல் காத்துக் கொண்டிருந்த இளையவன் எதிரில் ஏன் வரவில்லை?

மலை எடுத்தெண் திசை காக்கும் மாக்களை
நிலை கெடுத்தேன் எனும் மாற்றம் நேரும் நீ
சிலை எடுத்திளையவன் நிற்கச் சேர்ந்திலை;
தலை எடுத்தின்னமும் மகளிர்த் தாழ்தியோ!

இரு மனிதர்களால் என்னை என்ன செய்ய முடியுமென் கின்ருய்? ஒருலட்சுமணரேபோதும்! உலகைத்தையழித்து விடுவார். யுத்தம்வரின் நேரில் நீயே பார்ப்பாய்!

இரு வரென்றிகழ்ந்தனை என்னில் யாண்டினும்
ஒருவன் அன்றே உலகழிக்கும் ஊழியான்
செருவருங் காலம் என் மெய்ம்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந்து ஆவி பொன்றுவாய்!

நீ செய்த பெரும் புண்ணியத்திஞல் உனக்கு இன்று ஏற் பட்டுள்ள சிறப்பு மாற்ருனுடைய மனைவியை இச்சிப்பதால் அழிந்து விடும் என்பதை எண்ணிப்பார்! உன் பெருமைகளை எல்லாம தெரிந்தும் உன் தங்கை மூக்கைத் தயங்காமல் எம்மவர் அறுத்தனர் என்ருல், அவர் ஆண்மை எப்படிபட்டது என்பதை யோசித்துப்பார்! ஆயிரம் கைகளை யுடைய கார்த் தவீரியன் உன் இருபது கைகளையும் பிடித்து உன் வாயில் இரத்தம் வரக் குத்தினது ஞாபக மில்லையோ? அந்தக் கார்த்த வீரியனைக் கொன்ருர் பரசுராமர்! அந்தப் பரசுராமர் என் நாயகர் எதிரில் நிற்க முடியாது பலமிழந்து சென்றது அறியாயா?

ஆயிரந்தடக்கையான் நின் ஐந்நான்குகரமும் பற்றி
வாய் வழி குருதி சோரக் குத்திவான் சிறையில்
[வைத்த

தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன்:
[தொலைந்தமாற்றம்,
நீயறிந்திலையோ? வெகு நெறியறிந்திலாத நீசா!

விஷப்பாம்பும் மந்திரத்திற்குக் கட்டுபடும். உனக்குப் படும் படி நற்புத்திகளைக் கூறும் மந்திரிகள் உன்னிடம் இல்லை. உன்னையழிக்கத்தக்க போதனையாளரே உன் பக்கத்தி லிருக்கும் போது, நீ எப்படி வாழமுடியும்?"

தருமம் நிரம்பிய இவ்வார்த்தைகளை சீதை கூறக் கேட்ட இராவணன் அளவில்லாத கோபத்தை அடைகிறான் சீதாபிராட்டியின் மீதிருந்த அடங்காத மோகத்தை கூட வென்று விட்டது அந்தக் கோபம்! "இதோ! உன்னைப் பிளந்து தின்று விடுகிறேன்! பார்!" என்று எழுந்த இரா வணனைக் கோபந் தூண்ட காதல் தடுக்கத் தடுமாறுகிறான், இராவணன் வாளை ஓங்கி அம்மையை நோக்கி வருவது கண்ட அனுமான், "தனியாக நிற்கும் இவ்விராவணனின் பத்துத்தலைகளையும் தாக்கித்தகர்த்து எறிந்து இலங்கை யைத் தரையோடு பெயர்த்தெடுத்துத் தலைகீழாகக் கடலில் எறிந்து சீதையைத் தூக்கிக்கொண்டு ஓடி விடுகிறேன்" என ஆத்திரத்தில் கையைப் பிசைகிறான்.

தனியில் நின்றவன் தலைபத்தும் கடிதுகத்தாக்கிப்
பனியின் வேலையில் இலங்கையைக் கீழுறப்
[பாய்ச்சிப்
புனிதமாதவத் தணங்கினைச் சுமந்தனன் போவான்:
இனிதின் என்பது நினைந்து தன் கரம் பிசைந்து
[இருந்தான்.

சீதையைக் கொன்று விடுகின்றேன் என எழுந்த இரா வணன் திடீர் என்று சாந்தமடைந்து பேசுகின்றான்.

"தேவி! உன்னைக் கொல்லுகிறேன் என்று எழுந்தேன்! ஆனால் கொல்ல மனம் வரவில்லை. நீ சொன்ன வார்த்தைகளுக்கு என்னால் பதில் கூற முடியும். எனக்கு வெற்றி தோல்வி என்பது விளையாட்டு. நான் மறைந்து வந்ததால் பயந்தவன் என்கிறாய். நான் நேராக வந்திருந்தால் அந்த இராமனைக் கொன்றிருப்பேன். அவன் பிரிவு தாங்காமல் நீ இறந்திருப்பாய். நீ இறந்தால் நான் உன் பிரிவு தாளாது மடிந்திருப்பேன். ஆகவே நான் வாழவேண்டும் என்றால் நீ உயிருடனிருக்கவேணும். நீயோ இராமன் இருந்தால்தான் உயிர் தாங்குவாய் என்பதை எண்ணி நான் வஞ்சனை செய்தேனே தவிர, யார் என் எதிரில் நிற்கமுடியும்?

ஒன்று கேளுரைக்க நிற்கோர் உயிரென உரியோன்
[றன்னைக்
கொன்று கோளிழைத்தால் நீ நின்னுயிர்விடில்
[கூற்றங் கூடும்
என்றனுருயிரும் நீங்கும் என்பதை இயைய எண்ணி
அன்று நான் வஞ்சம் செய்தேன் யாரெனக்கமரி
[னேர்வார்?

மானுக்குப்பின் போன மனிதர் திரும்பி வந்து நான்தான் உன்னை எடுத்துச் சென்று விட்டேன் என்பதையறிந்தால் இந்தப்பக்கமே வரமாட்டார். தேவர்கள் கூட எனக்குப் பயந்து இராமனிடம் உன் நிலையை எடுத்துச் சொல்ல மாட்டார்களே. தேவர்களை வென்ற எனக்குக் கேவலம் அந்த இரண்டு மனிதர்களைக் கொல்வது பெரியதில்லை, வேண்டுமானால் பார்! நானே அவர்களைக் கூட்டி வந்து எனக்கு வேலையாட்களாகச் செய்து கொள்கிறேன். தேவி! அவ்விருவரையுங் கொல்லாது விட்டதற்கு வேறொரு காரணமும் உண்டு. அழகே உருவான உன்னை எனக்கு மனைவியாக அளித்த அந்த மனிதனை நான் கொல்லலாமா? நான் என்ன அவ்வளவு நன்றி கெட்டவனா?

பதவிய மனிதரேனும் பைந்தொடி! நின்னைத்தந்த
உதவியை உணர நோக்கின் உயிர்க் கொலைக்
[குரியரல்லர்

சிதைவுறல் அவர்க்கு வேண்டிற் செய்திறன்
[தேர்ந்ததெண்ணி
இதனினக்கீதேயாகின் இயற்றுவல் காண்டியின்னும்,

வேண்டுமென்றால் பார்! இராமலட்சுமணர்களையும் கொன்று மிதிலாபுரி, அயோத்தி இரண்டிடங்களுக்குஞ் சென்று அவர்கள் யாவரையும் கொன்று திரும்பி வந்து உன்னையும் கொன்று விடுகிறேன்! எனக்கா வீரமில்லை!" என்று கூறிய இராவணன் சீதையைச் சுற்றியுள்ள அரக்கிகளிடம், "அவளுக்கு பயம் உண்டாகும்படி செய்தோ அல்லது நல்ல வார்த்தை சொல்லியோ வசப்படுத்தவில்லையானால் உங்களுக்கெல்லாம் நான் நஞ்சாயிருப்பேன். ஜாக்கிரதை" என்று கூறி அசோகவனத்தை விட்டு ஓடி விடுகிறான். சீதையைச் சுற்றிய அரக்கிகள் எழுந்து பிரமனுடையபேரன். ஆயிரவேதம் படித்த அறிவாளி! உன்மீது அன்புவைத்தால் நீ ஏன் இணங்கக் கூடாது? "என்றும்" இவளோடு என்ன பேச்சு! கொன்று கிழித்து ஆளுக்குக் கொஞ்சமாகச் சாப்பிடுவோம்" என்றும் பயமுறுத்துகின்றார்கள்.

மறைந்திருந்த அனுமான் "பிராட்டியைக் காண்பதற்கு ஏற்ற காலம் இதுதான்! இனி இராவணன் இப்போதைக்கு வரமாட்டான். அரக்கிகள் தூங்கினால் அம்மையைத் தனியாகச் சந்திக்கலாம்" எனக் காத்திருந்தும் அவர்கள் உறங்காதது கண்டு நித்திரா தேவியின் மந்திரத்தை உச்சரித்து அரக்கிகளை மயக்க, அவர்கள் திடீரென்று கீழே விழுந்து தூங்க ஆரம்பித்துவிட்டனர்! "ஐயோ! நான் நித்திரை உண்டாகத்தானே மந்திரம் கூறினேன்! இவர்கள் இறந்துவிட்டார்கள் போலிருக்கின்றதே" என்று அனுமானே அவர்களுடைய அயர்ந்த நித்திரையைக்கண்டு ஆச்சரியப்படுகின்றான்.

## 6. மனமகிழ் வெய்திய மங்கை நல்லாள்.

யாவரும் தூங்குகின்றனர். ஆறுதல் கூறும் அருந்துணைவியான திரிசடைகூட அயர்ந்து விட்டாள். தனிமையடைந்த சீதை துயரடைந்து தடுமாறி தன் நிலையை

என்னைப் புலம்புகின்ருள், "நீலமேகத்தின் கருணை அல்லவா மழை! இராமனும் கருணை மழை பொழியும் மேக மன்ரே? கடலின் கம்பீரம் போல் இராமனும் கம்பீர புருஷனல்லவா? குளிர்ச்சி பொருந்திய பூஞ்சோலையின்பம் இராமனின் திருவடியினைப் கிடைக்குமன்ரே! இப்பேர்ப் பட்ட கருணையும், கம்பீரமும், இன்பம் தருந்தன்மையும் கொண்ட இராமபிரான் இந்நாட்டிற்கு வருவாரா? அப்பெரு மானுடை ஜய கோதண்டத்தின் சலங்கைகள் சப்திக்கும் நன்னுள் என்று வரும்? விதியே! எனக்கும் ஒரு நற்காலம் வருமா? நானும் களிப்படைந்து வாழும் ஒரு நாள் கிட்டுமா?

கருமேக நெடுங்கடல் காவனையான்
தருமே தனியே எனதாருயிர்தான்
உருமேறுறழ் வெஞ்சிலைநாணெலிதான்
வருமே! உரையாய்! வலியார் வலியே!

"ஏ! சந்திரனே! நிலவொளியே! இராத்திரியே! எல்லாரும் என்னையே காண்கின்றீர்களே! என் ராமனையாருங் காண்ப தில்லையா" என்றெல்லாம் வருத்தமடைந்து புலம்பும் சீதா பிராட்டியின் நிலையைப் பாருங்கள்!

"ராம" என்று ஒரு முறை கூறினல் திருமாலின் ஆயிர நாமங்களைக்கூறிய பெருமை கிட்டும் என்பார் பெரியோர்! சீதாபிராட்டி தனது நாயகனுன இராமபிரானின் பெயரை எங்ஙனம் கூற முடியும்! ஒரு குலமகள் தனது மணளனின் பெயரைக் கூறுவதை நந்தமிழ் நாட்டு ஒழுக்கம் எவ்வாறு அனுமதிக்கும்? சீதாபிராட்டியார் தனது நாயகன் பெயரைக் கூறுவதற்கு பதில் திருமாலின் ஆயிர நாமங்களை (விஷ்ணு சகஸ்ர நாமம்) ஒரு முறை பாராயணஞ் செய்து விட்டாள் என்கின்ருர் ஒரு பக்தசிகாமணி. "இராமபிரான் வராதிருக்க மாட்டார் என்ற ஒரு நம்பிக்கையில் ஒரு ஆயிர கோடி இன்னல்களைச் சகித்திருக்கிறேனே!" என்று அலறிய பிராட் டியின் உள்ளம் "என்றுங் குறையாத வலிமையுடையவனே!

நாராயணா! உலகின் தனி நாயகனே!" என்று சகஸ்ரநாமம் பூராவையும் இரண்டே வரிகளில் அடக்கி விடுகின்றது!

*வாரா தொழியான் எனும் வண்மையினால்*
*ஓராயிர கோடி இடர்க் குடையேன்*
*தீராவொரு நாள் வலி சேவகனே!*
*நாராயணனே! தனி நாயகனே*

மேற்படிப் பாசுரத்தை தினமும் பாரயணஞ் செய்தால் திருமாலின் கருணைக்குப் பாத்திரமாவர் என்றும், திருமாலின் ஆயிர நாமங்கள் உள்ள தோத்திரத்தைக் கூறிய பலன் கிட்டும் என்றும், சகல துன்பங்களும் நீங்கும் மென்பதும் பெரியோர் கண்ட உண்மை. இது எமது சொந்த அனுபவம். எமக்கும் எமது சில நெருங்கிய அன்பர்கட்கும் இச்சிறிய பாடல் தோன்றாத் துணையாயிருந்து எம்மைப்பல துன்பங்களிலுமிருந்து காப்பாற்றியது. இதைப்படிக்கும் அன்பர்களும் இப் பாடலை மனனஞ் செய்து இதனால் ஏற்படும் நன்மைகளையடைந்து வாழ வேண்டு மென்பது எமது விருப்பம்! இராமபிரான் அவ்வாறே அருள்வாராக! நாராயண நாமம் எண்ணியவற்றை யளிக்கும் என்பர் திருமங்கையாழ்வார்.

*குலந்தரும்: செல்வந்தந்திடும்: அடியார் படுதுய*
*[ராயின வெல்லாம்*
*நிலந்தரஞ் செய்யும்: நீள்விசும்பருளும்: அருளொடு*
*[பெருநிலமளிக்கும்:*
*வலந்தரும்: மற்றுந்தந்திடும்: பெற்றதாயினுமாயின*
*[செய்யும்:*
*நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்*
*[நாராயணா வென்னு நாமம்.*

யாவுந்தரும் இப்புனித நாமம் பிராட்டியாருக்கு முதலில் பெரிய தொரு மனப்புயலைக்கிளப்பிவிட்டுப் பின் மிகமிக ஆபத்தான நிலையில் உதவி விட்டது.

"இதுவரை இராமபிரானை மீண்டும் காணவேண்டு மென்ற ஆசையால் பொறுமையுடன் உயிரைத்தாங்கினேன். ஆனால் அரக்கர்வீட்டிலே வெகு காலம் உயிருடன் வாழ்ந்த என்னைப் புனிதமூர்த்தியான இராமபிரான் ஏற்றுக் கொள்ளு வாரா? நான்படித்த கதைகளில் கூட ஒருபெண் தனது நாயகனைப்பிரிந்து வாழ்ந்ததில்லையே? மாற்றானுடைய வீட்டிற்குச் சென்ற பெண்ணை இனி நாம் விரும்புவதிற் பிரயோசனமில்லை என இராகவன் எண்ணினர் போலும்! எப்போது எனக்குப் பழிவந்ததோ அப்போதே என் உயிர் போயிருந்தாலல்லவா நான் உத்தமி! ஆம்! வஞ்சகமானுக் குப்பின் என் நாயகரை அனுப்பி அதன்பின் மைத்துனனைக் கண்டபடி பேசி என் நாயகரைத் தேட அனுப்பிய கொடுர மனத்தினள்யான்! இராவணன் என்னைக் கண்டு ஆசை கொண்டது எனக்கு அவமானமன்றோ! "பத்தினிப் பெண்டிர் பிறர் மனம் புகார்" என்ற நிலையை மீறின என்னை உலகம் தாங்கலாமா? தனது கணவனது பிரிவு என்பதை எண்ணிய உத்தமப் பெண்கள் உயிர் விடுவார். தனது உடலிலிருந்த கேசம் எடுக்கப்பட்டால் உயிர் விடும் கவரிமான் போன்றவர். இராமபிரான் தனது வில்லின் வலிமையால் என்னை மீட்டுச் செல்லுங்கால்" இராமபிரானைப் பிரிந்து கள்வர்களின் ஊரில் உயிருடன் வாழ்ந்தவள் இவள்" என்று அண்மையில் வந்து பிறர்சுட்டிக்காட்டிப் பேசினால் அதை நான் எப்படிப் பொறுப்பேன்?

*வருந்தலின் மானமா அனைய மாட்சியர்*
*பெருந்தவ மடந்தையர் முன்பு: பேதையேன்*
*கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வரூர்*
*இருந்தவள் இவள் என ஏச நிற்பேனோ!*

கருணாமூர்த்தியான எனது நாயகர் இங்கு வந்து அரக்கர் யாவரையும் அழித்து என்னை விடுதலை செய்து, "தேவி! உன்னைத்தூக்கிய இராவணனைக் கொன்று என் கடமையைச் செய்து விட்டேன். அரக்கன் வீட்டில் என்னைப் பிரிந்து உயிர் வாழ்ந்த நீ என் வீட்டில் புகுந்து வரத் தகுதியில்லாதவள்

(இல்புகத்தக்கலை) என்று கூறிவிட்டால் எனது கற்பை நான் அவருக்கு எப்படி நிரூபித்துக் காட்டுவேன். ஆதலால் மரணமே எனக்குத் தகுந்த தண்டனை. சாகாதே என்று என்னைத் தடுக்கக் கூடிய திரிசடை போன்றவர் கூடத் தூங்குகின்றனர். இம்மாதிரி இடமும் காலமும் கிடைக்காது'' என்று பிராட்டியார் தற்கொலை செய்து கொள்ளத்திர் மானித்து ஒரு மாதவி மரத்தை யடைந்தனள்,

ஆதலால் இறத்தலே அறத்தின் ஆறு
சாதல் காப்பவரும் என் தவத்திற் சாம்பினர்
ஈதலாதிடமும் வேறில்லை என்றொரு
போதுலா மாதவிப் பொதும்ப ரெய்தினள்

மாதவி மரத்தையடைந்த சீதாபிராட்டி மணிக்கொடி ஒன்றை மரக்கிளையில் சுற்றித் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டு தற்கொலை செய்து கொள்ள முயற்சிக்கும் நிலையினை அனுமன் பார்த்து விடுகிறான். அவள் என்ன கருத்துடைய வளாயிருக்கின்றாள் என்பதை யறிந்து கொண்டுவிடுகிறான். ஐயோ! மாற்றானுடைய மனைவியாயிற்றே! இவ்வளவு ஆபத்திலும் அவ்வம்மையின் புனித உடலைத் தீண்டக் கூடாதே! என்ன செய்வேன் என்று எண்ணிப் பரபரப் படைந்த அனுமான் "தாயே! இதோ அடியேன் இராம தூதன்! வந்து விட்டேன்" என்று பிராட்டியின் திருவடிகளை வணங்கிக் கொண்டே தோன்றுகிறான்.

கண்டனன் அனுமனும்: கருத்தும் எண்ணினான்:
கொண்டனன் துணுக்கம்: மெய்தீண்டக் கூசுவான்:
அண்டர் நாயகன் அருள் தூதன் யானெனாத்
தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினான்

தாயே! இராமன் ஆணையால் அடியேன் வந்துள்ளேன். உலகம் பூராவும் குடைந்து தேடினேன். தாயே! நீ இங்கிரு ப்பதை என் இராமபிரான் அறிய மாட்டார். அதற்குக் காரணம் காட்டுகிறேன். அவர் அறிந்திருந்தால் அரக்கர்

குலம் அப்போதே அறிந்திருக்கும். அம்மா! சந்தேகிக்க வேண்டாம். உனது அடையாளமும் இராமபிரான் கூறிய அடையாளங்களும் உள்ளன. அவற்றைப்பின்னர் காட்டுகிறேன்.

*ஐயுறல்! உனதடையாளம் ஆரியன்*
*மெய்யுற உணர்த்திய உரையும் வேறுள:*
*கையுறு நெல்லியங் கனியில் காண்டியால்*
*நெய்யுறு விளக்கன்னாய்! நினையல் வேறென்றான்.*

என்று பேசி நிற்கும் அவனை நோக்கிய சீதாபிராட்டி அவனுடைய படபடத்த நிலையைப் பார்த்து இரக்கமுமுற்று அவன் "ஒருவேளை ராக்ஷசனோ! ஐம்பொறிகளையடக்கிய முனிவனாயிருக்கலாமோ? அல்லது தேவனாயிருக்குமோ" என்றெல்லாம் எண்ணி "அவன் அரக்கனாயிருந்தால் என்ன! அமரனாயிருந்தால்என்ன? அல்லது குரங்காகத்தான் இருக்கட்டுமே! யாராயிருந்தாலும் சரி! தற்கொலை செய்து கொண்டுஅநாதையாக இறந்து போக நினைத்த போது இரக்கமேயுருவமாக வந்து என் அருமை நாயகனை ராமபிரானின் நாமத்தைக் கூறி என் உள்ளத்தை உருக்கி இராமனின் அடிமையான நீ தற்கொலை செய்து கொள்ளுதல் தகாது என்ற உண்மை உணர்ச்சியைத் தந்த இவன் எப்பேர்ப்பட்ட உபகாரி" என்று உருகிவிடுகிறாள்,

*அரக்கனேயாக: வேறோ ரமரனேயாக! அன்றிக்*
*குரக்கினத் தலைவனேதான் ஆகுக! கொடுமையாக*
*இரக்கமேயாக வந்திங்கு எம்பிரான் நாமம்*
*[சொல்லி*
*உருக்கியே உணர்வைத்தந்தான் உயிரிதினுதவி*
*[யுண்டோ.*

என்றெல்லாம் எண்ணிய சீதாபிராட்டி இவன் வஞ்சகனல்லன். கண்களில் நீர் விட்டுப் புலம்பிக் கொண்டு நிற்கின்றான், குற்ற மற்றவன் போலும். எனவே இவனிடம் பேசலாம் என்றமுடிவுக்கு வருகின்றாள்.

இந்த இடத்தில் முதல் நூலுக்கும் கம்பனுக்கும் ஒரு வித்யாசம் காணப்படுகிறது. சீதாபிராட்டி தற்கொலை செய்து கொள்ள இருந்த காலத்தில் அனுமன் அவ்வம்மையின் காது கேட்க இராமபிரானின் கதையை "இட்சுவாகு வம்சத்தில் தசரதர் என்று ஒருவர் இருந்தார்" என ஆரம்பிப்பதாகவும் கதையைக் கேட்டுச் சீதை அனுமானை அழைத்துப் பேசுவதாகவும் காணப்படுகின்றது. அது காவியரீதிக்கு ஒத்தும் வரலாம். ஆனால் கம்பனது காவியத்தை கம்ப நாடகம் என்றே கூறுவர். நாடகத்தின் நடுவே தற்கொலை செய்து கொள்ள முயற்சிக்கும் மனமுடைந்த பெண் ஒருத்தி கதை கேட்டுக் கொண்டு தனது தற்கொலை முயற்சியை ஒத்திப் போட்டாள் என்பது நாடகப் பண்புக்கு அசம்பாவிதம். ஆதலால் சீதை தற்கொலை செய்து கொள்ள முயற்சித்த காலத்தில் அனுமன் பதட்டமடைந்து பிராட்டி எதிரில் "இதோ இராமதூதன் வந்து விட்டேன்" என்று தோன்றுவதாக மாற்றியிருப்பது கம்பன் நாடக சாத்திரப் புலமையையும், ரசிகத்தன்மையும், மேதாவிலாசத்தையும் புலப்படுத்திக் காட்டி நமக்கு இன்பத்தையளிக்கின்றது. நிற்க.

அனுமனிடம் பேச ஆரம்பிப்பது எப்படி என்று தேவி யோசிக்கிறாள். "தேவா!" என அழைக்கலாம் என்றால் இந்தக் குரங்கு தேவனாகயில்லாமல் அரக்கனாக இருந்து விட்டால்! "அரக்க" என அழைத்தால் அரக்கனாக இல்லா விட்டால்! "குரங்கே" என அழைத்தால், அரக்கனொருவன் அன்று மானாகக் கொண்டுவந்த மாதிரி இன்று வேறொருவன் குரங்காகவந்திருந்தால்! எப்படி அழைக்கலாம் என யோசித்த பிராட்டி "வீர! நீ யார்" என்கிறாள். தேவனாயிருந்தாலும் அரக்கனாயிருந்தாலும் குரங்காயிருந்தாலும் வீரன் என அழைக்கலாம்! அதுவும் குரங்காக இருக்கும் பக்ஷத்தில் இராவணனுடைய இவ்வளவு கட்டுக்காவலை மீறிவர வீரமிருந்தால் மட்டுமே வரமுடியும். எனவே, வீர! என்று அழைப்பது மிகமிகப் பொருத்தமானது என்பது அம்மையின் முடிவு.

''வீர! நீ யார்''எனக்கேட்ட அம்மையின் வார்த்தையை உச்சிமேற் கொண்ட அனுமான் ''அன்னையே! உன்னைத்தேடி வந்த பெருமான் சுக்கிரீவராஜன் எனும் எங்கள் அரசனை யடைந்தார். எங்கள் அரசனுடைய அண்ணனாகிய வாலி என்பவனை ஒரே அம்பால் உயிர்பறித்து எங்கள் அரசனாகிய சுக்கிரீவனுக்கு அரசையளித்தார். அந்த சுக்கிரீவராஜனு டைய மந்திரி அடியேன். என் பெயர் வாயு குமாரனாகிய அனுமான். பின்னர் எல்லாதிக்குகளுக்கும் குரங்குகள் ஏவப் பட்டன. அம்மா! என்னை இராமபிரான் தென்திசைக்குப்போ என்றார். அவர் வார்த்தை வீணாகுமோ! தாயே! இராமபிரா னுக்குத் உன் மீதுள்ள அன்பை எவ்வாறு கூறுவேன்? உலகத்து மக்களுடைய மற்ற நகைகளை அவர்களுடை மாங் கல்யம் காப்பாற்றும், அதாவது திருமாங்கலியம் தரித்தால் மற்றநகைகள் தரிக்கலாம். ஆனால் மற்ற நகைகளெல்லாம் உன் திருமாங்கல்யத்தைக் காப்பாற்றி விட்டன. உன்னை அன்று அரக்கன் எடுத்துச் சென்ற காலத்தில் எம் மீது விட்டெறிந்த நகைகளை நாங்கள் பெருமானிடம் காட்ட அவர் அது கண்டு சமாதானமடைந்து உயிருடனிருக்கிறார். திருமாங்யகல்மும் காப்பாற்றப்பட்டுவிட்டது.''

*கொற்றவற் காண்டுகாட்டிக் கொடுத்த போதடுத்த*
*[தன்மை*
*பெற்றியின் உணரற் பாற்றோ! உயிர்நிலைபிரிதும்*
*[உண்டோ!*
*இற்றை நாள் அளவும் அன்னாய்! அன்று நீயிழித்து*
*[நீத்த*
*மற்றை நல் அணிகள் காண்! உன்மங்கலம் காத்த*
*[மன்னோ!*

என்றெல்லாம் பேசும் அனுமனை நோக்கி பிராட்டியார் ''ஐய! சொல்! ஐயன் திருமேனி எவ்வாறிருக்கும்?'' எனக் கேட் கின்றாள்.

"தாயே! இராம சௌந்தரியத்தின் எல்லையை யாரே முடியக் கண்டவர்? அப்பெருமானுடைய அழகு வர்ணனைக்குட்படாதது" என்று கூறிவர்ணிக்கத் தொடங்குகின்றான்.

"இராமபிரானுடைய திருவடியைக் தாமரை யென்றால் ஒவ்வாது. ஒரே மாதிரி இருக்கும் இராமபாதங்களும் அடிக்கடி மலர்ந்து குவியும் தாமரையையும் எவ்வாறு உவமை கூறமுடியும்? ஆதவனைக் கண்ட தாமரை மலர்ந்தது போல் மலர்ந்த இராமபிரானின் திருக்கையிலுள்ள விரல்களின் நகங்களின் கூர்மையையும் செம்மையையும் நோக்குங்கால் இவைகள் தாம் இரணியனின் மார்பைப் பிளந்து கொன்றன என நிச்சயிக்கலாம், கூர்மையான நகங்கள் அவன் மார்பைப் பிளந்தன என்பது மல்லாமல் அவ்விரணியனின் இரத்தத்தால் சிவந்தன போலுள்ளன அந்தவிரல்கள்!

பச்சிலைத் தாமரைப் பகல் கண்டாலென
கைச் செறி முகிழுகிர் கனகன் என்பவன்
வச்சிரயாக்கையை வகிர்ந்த வன்றொழில்
நிச்சயமாமெனில் நிலையை நீங்குமோ.

இராமபிரானின் தோள்களை மலைக்கு உவமையாக்கலாம் என்றால் அம்மணி! எந்த மலையும் மலையை ஒடித்ததில்லை. இராமபிரானின் தோள் மலைகளோ சிவதனுசாகிய மேரு மலையை ஒடித்தன. இராமபிரானின் திரு முகத்திற்குத் தாமரையை உவமையாகக் கூறலாம் என்றால் ஒரு தாமரைக்குள் மற்றும் இருதாமரைகள் பூக்காது. முகம் தாமரை என்றால் கண்களுக்கு என்ன உவமை கூறுவேன்? சந்திரன் என முகத்தைக் கூறலாம் எனில், சந்திரனுக்குக் களங்கம் உண்டு. பெருமான் திருமுகத்தில் களங்கம் கிடையாது. சந்திரன் தேய்ந்தும் வளர்ந்தும் வருகின்றான். பெருமானுடைய முகம் என்றும் ஒரேமாதிரி விளங்குகின்றது.

அண்ணல்தன் திருமுகம் கமலமாமெனில்
கண்ணினுக் குவமை வேறுயாது காட்டுகேன்?

தண்மதி யாமென உரைக்கத்தக்கதோ?
வெண்மதி பொலிந்தது மெலிந்து தேயுமால்!

தனக்கு ராஜ்ஜியம் கிடைத்த அன்றும் அதை நீங்கிக் கானகம் புறப்பட்ட அன்றும் பெருமான் மாறுது நடந்த அவருடை நடையை யானை போல் கம்பிரமாக நடந்தார் என்று கூறுவதா? காளை மாதிரி நடந்தார் என்று கூறுவதா? தாயே! இதெல்லாம் என்ன? அப்பெருமான் நேரில் கூறிய அடையாளங்களை சொல்லுகிறேன். அம்மணி! காடு புறப்படும் அன்று காடுவழி மிகத்துன்பமானது நடக்க முடியாது. சிறிது நாட்கள் தானே! நீ என் தாய் தந்தை யருக்கு வேண்டிய குற்றேவல்களைச் செய்து கொண்டு இங்கேயேயிரு என்று எம் பெருமான் கூற உடுத்த ஆடை யுடன் அப்படியே கோபித்துக் கொண்டு பின்னாலேயே புறப் பட்டாயாம். அதை ஞாபகப்படுத்தச் சொன்னார்.

நடத்தலரிதாகு நெறி! நாள்கள்சில; தாயர்க்கு
அடுத்தபணி செய்திவண் இருத்தி என லோடும்
உடுத்த துகிலோடும் உயிருக்க உடலோடும்
எடுத்த முனி வோடும் அயல் நின்றதும் இசைப்பாய்.

தனக்கென்று கிடைத்த அரசைத் தம்பிக்கு அளித்துப் பெருமான் உன்னையும் அழைத்துக் கொண்டு அரண்மனை வாசலுக்கு வருவதற்குப் புறப்பட்டு வரும் பொருட்டு அனேக கூடங்களைக் கடந்து வர நீ வாசற்படி வருவதற்கு முன்னாலேயே, காடுவந்து விட்டதா எனக் கேட்டதை ஞாபகப்படுத்தும் படி கூறினார்.

நீண்டமுடிவேந்தன் அருள் ஏந்தி நிறை செல்வம்
பூண்டதனை நீங்கி நெறி போதலுரு நாளில்
ஆண்ட நகரரரையொடு வாயிலகலாமுன்
யாண்டையது கானென இசைத்தது மிசைப்பாய்.

காட்டிலே வந்து தங்கிய அன்று, அன்னையே! வீட்டி லிருக்கும் கிளி, புரு முதலானவற்றைப் பத்திரமாகப்

பார்த்துக் கொள்ளும்படி சுமந்திரன் மூலமாக உன் தங்கை யருக்குச் செய்தியனுப்பினுயாம். அதையும் ஞாபகப் படுத்தும்படி கூறினுர்.

எள்ளரிய தேர் தரு சுமந்திரனிசைப்பாய்
வள்ளல் மொழி வாசக மனத்துயர் மறந்தாள்
கிள்ளை யொடு பூவைகள் கிளத்தல் கிளவென்னும்
பிள்ளை உரையின் திறம் உணர்த்துதி பெயர்த்தும்

தாயே! இனி வார்த்தையே வேண்டாம். உன்னை உருக்கி உணர்வை யளித்த எம்பெருமானுடைய உத்தம நாமம் பொறித்தது. மிகுந்த அழகிய இம்மோதிரத்தைப்பார் எனக் காட்டுகிருன் அனுமான். அம்மை சீதாபிராட்டி அதைக் காண்கிருள்.

மீட்டும் உரை வேண்டுவன இல்லை: எனமெய்ப்பேர்
தீட்டியது: தீட்டரிய செய்கையது: செவ்வே
நீட்டிதென நேர்ந்தனன் எனுநெடியகையால்
காட்டினனெ ராழியது வாணுதலி கண்டாள்

கணையாழியைக் கண்ட சீதையின் களிப்பை என்னென்பது? தனக்கு நற்கதியே கிடையாது என்றிருந்த ஒருவனுக்கு இறைவனுடைய புனித உலகம் கிடைத்தால் ஏற்படும் சந்தோஷத்தைக் கூறுவதா? முக்கிய விஷயத்தை மறந்து அதுமீண்டும் நினைவுக்கு வராதா என்று ஏங்கிவாடிய வருக்கு அந்த விஷயம் நினைவுக்கு வந்தால் ஏற்படும் மகிழ்ச்சியை ஒப்பிடுவதா? "ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவாரோ" என்று ஒருஉயிர் போனபின் யாவரும் ஏங்க திடீரென்று அவ்வுயிர் திரும்ப வந்ததால் அடைந்த களிப்பைக் கூறுவதா?

இறந்தனர் பிறந்த பயனெய் தினர்கொல் என்கோ?
மறந்தனர் அறிந்துணர்வு வந்தனர் கொல் என்கோ?
துறந்தவுயிர் வந்திடை தொடர்ந்தது கொல் [என்கோ?
திறந்தெரிவதென்னை கொல் இந்நந்துதலி செய்கை!

நல்லபாம்பு ரத்தினத்தைக்கக்கிவிட்டு இரைதேடச்செல்லும் ஒருபாம்பு அவ்வாறு சென்றபோது யாரோ அதனுடைய ரத்தினத்தை எடுத்து விட்டார்கள். பாம்பு ஆகாரம் வேண்டாம் ரத்தினம் கிடைத்தால் போதும் என்று தேடி வந்தபோது, எடுத்த ஆசாமி பயந்து அந்த ரத்தினத் தைக் கீழே போட்டு ஓடிவிட பாம்பு அந்த ரத்தினத்தை தன் புற்றின் வாயிலில் கண்டெடுத்ததாம். இழந்த இரத் தினத்தை தன் புற்றின் முன்னரே திரும்ப அடைந்த நாக சர்ப்பத்தின் களிப்படைந்தாள் பிராட்டி என்கிறார் கம்பர். பழைய பணக்காரன் தனது செல்வம் பூராவும் இழந்து கவலையேயுருவாக அலைந்த காலத்திலே திடீரென்று அவ் வளவு செல்வமும் மீண்டும் கிடைத்தால் அடைந்த களிப் பையடைந்தாள் அம்மை என்கின்றார். குழந்தையில்லாத குற்றத்திற்காக ஒரு அம்மையை மலடி என்று அழைத்த தாம் இவ்வஞ்சக உலகம். வேதனைப்பட்டு வருந்திய அம்மை இறைவனருளால் கருப்பம் எய்தி ஒரு அழகான ஆண்மகவைப் பெற்று எடுத்தாள். தன் வாழ்வை வளப் படுத்த வந்த அத்தெய்விகக் குழந்தையை அருமையாக வளர்க்கின்றாள் அந்த அன்னை. திடீரென்று ஒரு நாள் அக் குழந்தை இறந்து விடுகின்றது. அன்னை அலறுகிறாள். அந்நிலையில் திடீரென்று குழந்தை உயிர் பெற்று மீண்டும் விளையாடுகின்றதாம், அந்த அன்னையின் மகிழ்ச்சியை யடை கின்றாள் சீதாதேவி என்கின்றான் கவிஞன்.

திடீரென்று ஒருவன் தன் இரு கண்களின் ஒளியை இழந்து விடுகிறான். ஐயோ! ஆண்டவனே! என்னை பிறவிக் குருடனாகப் படைத்திருந்தால் துக்கப்படமாட்டேனே. உலகத்தைக் காட்டி மறைத்து விட்டாயே என்று வருந்தும் காலத்தில் திடீரென்று கண்ணொளி பெற்றான் என்றால் எத்தகைய மகிழ்ச்சி யடைவானோ அத்தகைய மகிழ்ச்சி யடைகிறாளாம் பிராட்டி.

*இழந்த மணி புற்றர வெதிர்ந்த தெனலானாள்*
*பழந்தனமிழந்தன படைத்தவரை யொத்தாள்*

குழந்தையை யுயிர்த்த மலடிக்குவமை கொண்டாள்
உழந்து விழி பெற்றதொருயிர்ப் பொறையு
[மொத்தாள்

இவ்விடத்தில் அழகிய ஒரு செய்தி. அனுமான் கணையாழி கொடுக்கவில்லை. காட்டினுன்: சிதாபிராட்டி கண்டாள். பிறகு அதை தன்கையில் வாங்கினுள் என்பது குறிப்பு. சிதை தாய். அனுமான் சேய். தாயின் கைதாழ்ந்து குழந்தையின் கைமேலே வரக்கூடாதாம். அனுமான் கணையாழியை தன் உள்ளங் கையில் வைத்துக் காட்ட அன்னை சிதை அதைத் தன்கையில் எடுத்துக் கொண்டாள் என்பது கம்பனின் எண்ணம்.

வாங்கினள் முலைக்குவையில் வைத்தனள்: சிரத்தால்
தாங்கினள்: மலர்க்கண் மிசை ஒத்தினள்: தடந்தோள்
வீங்கினள்: மெலிந்தனள்: குளிர்ந்தனள்: வெதுப்
[போடும்
ஏங்கினள்: உயிர்த்தனள்: இதின்னதெனலாமே.

கணையாழியை வாங்கிய சிதை அதனைமார்பில் அணைத்துக் கொண்டு தலையில் தாங்கி கண்களில் ஒற்றிக் கொண்டு ஆனந்தமடைவதைக்கூற வருணனைக் கடங்குமோ! தங்க மோதிரம்பெற்ற தாயின் உடல் பூராவும் மகிழ்ச்சியால் தங்க நிறமாகி விட்டதோ என்கிருன். பசியால் வருந்தி சாதாரண உணவாவது கிடைக்காதாவென ஏங்கிய வருக்கு தேவாமிருதமே கிடைத்தது போலும்: தருமவான் ஒருவனுக்கு உத்தம சற்பாத்திரமான ஒரு விருந்தாளி கிடைத்தது போலும்: இறந்துபோனவனுக்கு மீண்டும் உயிர் கொடுக்கும் மருந்து போலுமாகிறது கணையாழி. இவ்வாறு மகிழ்ச்சியடைந்தபிராட்டி "மாருதி! உலக நாயகனுன இராம பிரானின் திருப்பெயர் கூறி என் உயிரைக் காப்பாற்றினுய்: தற்கொலையால் கிடைக்க கூடிய நரகாவஸ்தையும் நீக்கி எனக்குப் புகழ் கொடுத்தாய். கம்பிரமான தோள்களை யுடையமாருதி! அனுதையாக இறந்து போக இருந்த

என்னைக் காப்பாற்றிய வள்ளலே! நான் குற்றமில்லாத பரிசுத்த மனமுடையவளாகில் இவ்வுலகமே அழிந்தாலும் நீ அழியாது என்றும் இன்று போலிருப்பாயாக" எனவாழ்த்துகிருள்.

*பாழிய பணைத்தோள்வீர! துணையிலேன் பரிவு தீர்த்த*
*வாழிய வள்ளலே! யான் மறுவிலா மனத்தேன்*
*[என்னின்*
*ஊழியோர் பகலாயோதும் ஆண்டெலாம்உலகமேமும்*
*ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி*
*[என்ருள்*

"திர்க்காயு சாயிரு" அதாவது "நீண்டகாலம் வாழ்வாயாக' என வாழ்த்துவது ஒரு வாழ்த்து மாதிரித் தோன்றிய போதிலும் "நீண்டகாலம் வாழ்ந்து மூப்பினுல் ஏற்படும் துன்பங்களை அனுபவிப்பாயாக" எனக்கூறுவது போல அமைகிறது அன்ருே? பிராட்டியார் "இன்றென இருத்தி" என்று வாழ்த்துவதன்மூலம் "நீ என்றும் இளமையும் பலமும் குறையாது இன்று போலவே வாழ்வாயக" என்று வாழ்த்தும் சிறப்பையும், அம்மையாருக்கு அனுமனென்னும் அந்த அருமை மகனிடம் உள்ள அன்பையும் எவ்வாறு விளம்புவது!

மகிழ்ச்சி கொண்ட பிராட்டியார் அனுமானிடம் மீண்டும் பேசுகிருள். "இராமபிரான் எவ்விடத்திலுள்ளார்? உன்னை எப்போது கண்டார்? நான் இராவணன் வீட்டில் சிறையிருந்ததை எவ்வாறு அறிந்தார்" என்று கேட்க அனுமான் பதில் கூறுகிருன். "தாயே! உன்னைக் காணுது இராமபிரான் உயிர் போன மாதிரி அலைந்தான்! அம்மணி! அப்பெருமானுடைய உயிராகிய நீ இங்கிருக்கும் போது அங்கு அவன் எந்த உயிரை விடுவான்?

*ஈண்டு நீயிருந்தாய்! ஆண்டங்கு எவ்வுயிர் விடும்*
*[இராமன்?*

அவ்வாறு தேடி அலைந்த இராமபிரான் ஜடாயுவை யடைந்து உன்னை ராவணன் என்பவன் எடுத்துச் சென்றான் என்று அவர் மூலமறிந்து கோப மடைய ஜடாயு கூறும் நல் வார்த்தையால் கோபமாறி விவரமாக விசாரிக்க முயன்ற காலை ஜடாயு இறந்து விட்டார். அவருக்கு வேண்டிய கடமைகளைச் செய்து அவ்விருவரும் செல்லுங்கால் இராம பிரான் உன் பிரிவால் வருந்திப் பயித்தியம் பிடித்தவன் போல் அலைந்தான். காட்டிலுள்ள மான் கூட்டங்களை "பொன்மான் உருவாக வந்ததனால் தானே என் மானாகிய சீதை என்னைப் பிரிந்தாள். உங்கள் குலத்தையே அழித்து விடுகிறேன்" என்று விரட்டித் திரிந்தான்.

பொன்மானுருவாற் சில மாயை புணர்க்க அன்றோ
என் மானகல்வுற்றனள் இப்பொழுது என் கண்?
["என்னா
நன்மான்களை நோக்கி 'நும் நாமமும் மாய்ப் பென்
[இன்றே
வில்மான் கொலை வாளியின் வெகுண்டு நின்றான்,

பின்னர் தம்பி கூறுஞ் சமாதான வார்த்தைகளை ஏற்றுக் கொண்டு ருசியமுகபர்வதம் வந்து சுக்ரிவனுடன் நட்பு பூண்டான். அங்கு உனது நகைகளை நாங்கள் காட்டச்சிறிது ஆறுதலடைந்தான். சுக்ரிவனுடைய அண்ணனாகிய வாலி என்பவனைக் கொன்று சுக்ரிவனுக்கு அரசையளிக்க அந்த மகாராஜனின் மந்திரியான நான் உன்னைத் தேடித் தென் திசை வந்தேன்" என்றான். இவ்வாறு கூறிய அனுமனை பிராட்டியார் "அப்பனே! நீ பெரிய தொரு கடலைக் கடந்து வந்தாய்? எப்படி வந்தாய்?" எனக் கேட்க" அன்னையே! உன் அருமை நாயகனின் திரு நாமத்தைக் கூறுவோர் பெரிய மாயை யாகிய கடலையே கடந்து விடுகின்றார். அதே நாமங்கூறி இக்கரிய கடலை எளிதாகக் கடந்து வந்தேன்" என்கிறான். "இவ்வளவு சிறிய உருவத்துடன் இப்பெரிய கடலைக் கடந்து வந்தாயே! ஏதாவது மந்திரமோ? எனப் புன்சிரிப்புடன் கேட்ட அம்மையிடம் கை கூப்பி நின்று,

இராமனை தியானிக்க ஆகாயம் தலையில் இடித்து விடுமோ என்னும்படிவளர்ந்து அனுமன் பிராட்டியரை உற்று நோக்கு கிருன். ஆகாயம் வரை அனுமான் வளர்ந்து பேருருவம் கொண்டு விட்டான் என்பது குறிப்பு, பேருருவங் கொண்ட அனுமானின் குண்டலங்களிரண்டும் சூரிய சந்திர மண்டலங் களை நிகர்த்தன. பாற் கடலிலே பள்ளி கொண்டிருந்த பெரு மான் "இதென்ன! நாம்தான் வாமனவதாரத்தில் வளர்ந் தோம் என்ருல் நம் மாதிரி யாரோ வளருகின்ருரே!" என ஆச்சரியப்படுகிருர். அனுமன் வளர்ந்து நின்றது கண்டு உலகிலுள்ள உயிர்களெல்லாம் அவரையே நோக்க அனுமான் தன்திருக்கண்களால் உலகம் பூராவும் பார்த்து விடுகிருன். இப்பேருருவங்கண்டு மகிழ்ச்சி கொண்ட பிராட்டி யார்" மாருதி! எனக்குப் பயமாயிருக்கின்றது. இந்த உருவ த்தை தயவு செய்து அடக்கிக் காட்டு" என்கிருள்.

*வஞ்சியம் மருவிலம் மருவில் கற்பினுள்*
*கஞ்சமும் புணர்வன கழலும் கண்டிலள்*
*துஞ்சினர் அரக்கர் என்றுவக்கும் சூழ்ச்சியாள்*
*அஞ்சினேன் இவ்வுரு அடங்குவாயென்ருள்*

அனுமன் தன் பேருருவத்தை மறைத்துச் சிறிய உருவமா கக் காட்ட மகிழ்ச்சியுடன் தேவி கூறுகிருள்" இராமபிரானின் புகழை நிலை நிறுத்த வந்த புண்ணியனே! உன் தன்மை யைத் தெரிந்து கொண்டுவிட்டேன். உன் பெருமை உலகம் அறிய வேண்டுமென்ருல் இலங்கை ஏழு கடலுக்கு அப்பால் இருந்திருக்கவேண்டும். இனி நான் இறந்து போனுலும் பரவாயில்லை: இன்றே சிறையிலிருந்து விடுதலை யடைந்தேன்: அதுமட்டுமல்ல: என்னை வருத்தப்படுத்திய வரை குலநாசம் செய்து விட்டேன். இராமபிரானின் திருவடியடைந்து விட்டேன். பழியைத் தீண்டமாட்டேன் என்கிருள்.

*மாண்டேனெனினும் பழுதன்றே! இன்றே மாயச்*
*[சிறை நின்றும்*

மீண்டேன் என்னை யொறுத்தாரைக் குலங்களோடும்
[வேரறுத்தேன்
பூண்டேன் எங்கோன் பொலன் கழலும்: புகழே
[யன்றிப் புன்பழியும்
தீண்டேன் என மகிழ்ந்தாள் திருவின் முகத்துத்
[திருவன்னாள்.

ஒரு பெண் அழகி என்றால் அவள் முகத்தில் லட்சுமி விலாசம் என்கின்றோம். லட்சுமி முகத்தின் அழகை எப்படிக் கூறலாம் என்றால் சீதாவிலாஸம் "திருவின் முகத்துத் திருவன்னாள்" என்கிறான் கவிஞன். "அன்னையே! என்னை இவ்வாறு எதற்குப் புகழுகின்றாய்? சுக்ரீவனுடைய சைன் யத்தில் என்னைக் காட்டிலும் பலசாலிகள் இருக்கின்றனர். நாங்கள் வரும் போது பார்! எங்களுக்கு ஒரு அணை கட்டிக் கூட இக்கடலைத் தாவவேண்டியதில்லை. ஆளுக்கு ஒரு கைநீர் அள்ளிக் குடித்தால் கடல் வற்றிப் போகும். நடந்தே வந்து விடுவோம்" என்கிறான். இவ்வாறு மிக மிகச் சாதுரியமாகப் பேசும் அனுமானைக் கண்டு பிராட்டி மகிழ்ச்சி கொண்டு நிற்கிறாள்.

## 7. சூளாமணி பெற்ற சூரன் ஹனுமான்!

மோதிரங் கண்டு மகிழ்ச்சியடைந்த மாதாவாகிய சீதையைக் கண்ட அனுமான் "இதே நிலையில் பிராட்டியை இராகவன் கண்டால் எப்படியிருக்கும்?" என எண்ணிய அதே நேரத்தில் அவளைத் தீண்டக் கூடாது. எனவே அவளுடைய உத்திரவு பெற்று தன தோளில் சுமந்து இராமபிரானை யடைந்து விடலாமென்ற முடிவிற்குவந்து மிக வணக்கத்துடன் பேச ஆரம்பிக்கின்றான். "தாயே! நான் கூறுவதை கவனமாகக் கேட்கவேண்டும். கோபித்துக் கொள்ளக் கூடாது உன்னை இராமபிரான் பாதத்தில் கொண்டு வைத்து வணங்க ஆவலுடையவனாயிருக்கிறேன். அதற்கு நீ செய்யவேண்டுவது என்ன தெரியுமா? பட்டு மெத்தை போன்ற ரோமங்கள் நிறைந்த என் தோளில்

நீ ஏறி அமர்ந்தவுடன் உன் துக்கம் பறந்து விடும். இன்பகரமான ஒரு சிறு தூக்கம் வரும். கலேவதற்குள் கண் திறக்கும் போது நீ இராமபிரானுடைய எதிரிலிருப் பாய். நடுவிலே யாராவது அரக்கர் வந்து தடுப்பாரோ என அஞ்சவேண்டாம். உன்னை ஒருகையில் வைத்துக் கொண்டு மற்ருெரு கையால் அவர்களைக் கொன்று விடுவேன். அன்னையே! உன்னை இந்த நிலையில் கண்டுவெறுங்கையுடன் போகமாட்டேன்.

*அறிந்திடை அரக்கர் தொடர்வார்கள் உளராமேல்*
*முறிந்துதிர நூறி எதிர் என் சினமுடிப்பேன்*
*நெறிந்த குழல்! நின் நிலைமை கண்டு நெடியோன் பால்*
*வெறுங்கை பெயரேன் ஒருவராலும் விளியாதேன்*

இராமபிரானிடம் சென்று அவருடைய மனைவி சிறையில் இருக்கின்ருள் என்று தெரிவிப்பதில் என்ன பயன்? சிறை வைத்த சிலமற்ற பாவிகளைச் சித்திரவதை செய்தேன் என் றல்லவா கூறவேண்டும். ஆகவே, அம்மணி! என் தோள் களில் ஏறிக்கொள்வாயாக என்று கூறிய அனுமனுக்குச் சீதை பதில் கூறுகின்ருள்.

"மாருதி! நீ கடினமான காரியத்தைக் கூறவில்லை. உன் பலத்திற்கு ஏற்ற காரியத்தையே எண்ணினுய்! அப்படியே செய்யவும் செய்வாய்! ஆனுல் எனது பேதைமையான பெண் புத்திக்கு அது ஏற்றதாகப் படவில்லை. என்னை எடுத்துச் செல்லுங்கால் அரக்கர் வந்து தடுத்தால் அவரைத் தடுப்பாயா? அல்லது என்னைக் காப்பாயா? தனிமையில் தடுமாறிவிடுவாய்! மற்றும் இராமபாணத் திற்கு இழுக்கைத் தேடி விடும் காரியம் அது! இராவணன் என்னும் நாய் எவருங்காணுத நேரத்தில் மாமிசத்தைக் கவ்வி வருவது போல் என்னை எடுத்து வந்தது. அவன் அறியாமல் என்னை நீ எடுத்துச் சென்ருல் அது இராவண னுக்குப் பயந்து செய்த செய்கை யாகும். ஆதலால் இரா வணனுக்கும் நமக்கும் என்ன வித்யாசம்? மாருதி! உன்

தோளில் வருமாறு என்னை அழைக்கின்ருய்! வரலாம். ஆனல் நீ பெண் குரங்காயிருந்தால்தான் வரலாம், இராம னென்னும் ஒரு ஆணைத்தவிர மிருகங்களில் கூட ஆண் மிருகத்தைத் தீண்டுதல் தருமவிரோதம் என்பதை நீ அறியாயோ?

வேறு முண்டுரை கேளது மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனி அல்லால் இடை
ஆறும் ஐம் பொறி நின்னையும் ஆணெனக் '
கூறும் இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ.

[இலக்கியங்களிலே பெண்கள் பெண்யானைகளிலும் ஆண்கள் ஆண்யானைகளிலும் வந்ததாகக் கூறுவதன் மூலம் பெண்களின் கற்பு நிலையை வருணித்தல் மரபு] சீதா பிராட்டிமேலும் பேசுகின்ருள் "மாருதி! இலங்கை மாத்திர மல்ல! எல்லையில்லபத இவ்வுலகங்கள் யாவையும் என்சொ ல்லினலேயே சுட்டு அழித்துவிடுவேன். இராமன்கையில் வில்லிருந்தும் பிராட்டித் தன் கற்பின் மகிமையால் தான் தன்னைக் காப்பாற்றிக் கொண்டாள் என இராமனை உலகம் ஏசக்கூடாது என எண்ணி பேசாமலிருக்கின்றேன்.

அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினுல் சுடுவேன்: அது தூயவன்
வில்லின் ஆற்றற்குமா சென்று வீசினேன்

ஆதலால் நீ இராமனிருக்குமிடம் சென்று என்னைக் கண்ட செய்தியைக் கூறுவாய்!" என்று கூறி முடிக்கிருள்.

"அன்னையே! சிலவினடிகளில் இராமபிரானையடைய வழி கிடைத்தும் வரமறுக்கிருய். சரி இராமபிரானுக்கு ஏதாவது செய்தியாவது கூறு. அங்குபோய்ச் சொல்லு கிறேன்" என்ற அனுமானுக்கு பதில் கூறுகிருள் சீதை.

"மாருதி! உன்னிடம் கூறும் வார்த்தை. இன்னும் ஒரு மாதம் தான் உயிருடனிருப்பேன். பின் உயிரை தரிக்க மாட்டேன். இதுராமபிரான்மீது ஆணையாகக் கூறும்செய்தி.

இன்னும் ஈண்டொரு திங்கள் இருப்பல்யான்
நின்னை நோக்கிப் பகர்ந்தபின் நீதி யோய்!
பின்னை யாவி பிடிக்கின்றிலேன்; எந்தன்
மன்னனாணை இதனை மனக் கொள் நீ

இராமபிரான் தன் மனைவி என்ற இரக்கத்திற்கும் தன் கடமைக்காகவும் என்னை வந்து காப்பாற்றட்டும். இரக்கமும் கடமையும் இல்லாவிட்டாலும் சரி. தன் மனைவியை எடுத்துச் சென்ற ஒருவனைக் கொன்று, தான் ஒரு வீரன் என்பதை யாவது நிலை நாட்டிக்கொள்ள தன் கடமையை நிறை வேற்றச் சொல். முப்பது நாட்களில் இராமபிரான் வரலாம். வந்து என்னைக் காப்பாற்றலாம். ஒரு வேளை நான் செய்த பாபம் அவருடைய வரவைத் தடுத்து விட்டதென்றால் முப்பது நாட்களுக்குப்பின் இங்கு வரவேண்டாம். கங்கைக் கரை சென்று அவருடைய கையால் எனக்கு ஈமக்கடன்களை செய்யுமாறு கூறி விடு.

திங்கள் ஒன்றில் என் செய்தவம் தீர்த்ததால்
இங்கு வந்திலனே யெனின்; யாணர்நீர்க்
கங்கையாற்றங்கரை அடியேற்குத்தன்
செங்கையால் கடன் செய்கென்று செப்புவாய்.

நான் இளையவருடைய காவலில் இருந்த காலத்தில் இராவணன் என்னை வஞ்சனையாக எடுத்து வந்தான். ஆதலால் என்னைக் காப்பாற்றுவது இராமனைக்காட்டிலும் லட்சுமணனுக்கு அதிகம் பொறுப்பு என்று கூறு. என் மாமியார் மூவருக்கும் என் வணக்கத்தை இராமபிரானிடம் கூறி, அவர் என் வணக்கத்தை என் மாமிமாருக்குக் கூறமறந்து விட்டால் நீ அவர்களிடம் நேரில் கூறுவாயாக. இன்னொரு இரகசியம். அதை இராமபிரானிடம் தனியாகச் சொல்லி விடு. இராமபிரான் என்னைத்திருமணஞ் செய்து கொண்ட அன்று "தேவி!

இந்தப் பிறவியில் இன்னெரு பெண்ணை மனத்திஞல் கூட தீண்ட மாட்டேன்" என்று கூறியவார்த்தையை ஞாபகப் படுத்துவாய்.

வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக் கிருமாதரைச்
சிந்தையாலுந் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்

அவருடைய சத்யவாக்கின்படி அவர் மறுமணம் செய்து கொள்ள முடியாது. இந்த மனைவி வேண்டுமென்ருல் முப்பது நாட்களுக்குள் வரச் சொல், ஒரு வேளை அவர் மறுமணம் செய்து கொள்ள நேர்ந்தால், நானே ஒரு பெண் ணுகப் பிறந்து அவருக்கு இரண்டாவது மனைவியாக வரு வதற்கு வரம் வேண்டினேன் என்று கூறுவாய்.

ஈண்டு நாளிருந் தின்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்து தன் மேனியைத்
தீண்டலாவதொர் தீவினைதீர் வரம்
வேண்டினுள் தொழுதென்று விளம்புவாய்

என்பதின் மூலம் பிராட்டியார் பிறவிமாறினுலும் அதே கணவன் வேண்டும் என்ற உயரியகற்பு நிலையைக் காட்டு கிருள். இராமபிரான் அரசராக அரியணையில் அமர்ந்திருப் பதையும் யானையின் மேல் ஊர்வலம் செல்வதையும் காண எனக்குப் பாக்கியமில்லை. இராமபிரான் எப்போது வருவார் என்று ஏங்கி வருந்தும் மக்களைக் காப்பாற்றவும், தன் தாயின் துயரத்தை நீக்கவும், பரதனுக்கு ஆறுதல் கூறவும், அயோத்தி சென்று விடுவார். என்னை நோக்கி எப்படி வருவார்?" என்றுகூறிக் கண்ணீர்விடும் பிராட்டி யாருக்கு அனுமான் பதில் கூறுகிருன்.

"அன்னையே! நீ உயிர் விட்டால் இராமபிரான் உயிர் சுமந்து ஊருக்குச் சென்று முடி சூட்டிக் கொள்ளுவாரா? உன்னைச் சிறையில் வைத்த உலுத்தன் உயிரோடிருக்க

கையில் வில்லிருந்தும் உன்னைக் காப்பாற்றும் கடமையை மறந்து தங்கள்வில் பொய்வில் என்று உலகம் பேசும்படி இராமலட்சுமணர் ஊர்போவார்களா? உன்னைத் துன்புறுத்தியகயவனைக் கொல்லாது இராமபிரான் ஊர்திரும்புவாராம்' அவர் கையில் வில்லுமிருக்குமாம். நாங்களும் கூடவே போவோமாம்? எங்கேயாவது நடக்குமா? துயரத்திலே துடித்துக் கொண்டிருக்கும் எங்கள் அரசனுக்கு மனைவியையும் அரசையும் அளித்த இராமபிரானுக்கு உன்னை இராவணனிடமிருந்து மீட்டுத் திருப்பியளிக்கவில்லை என்றால் எம்மைக் காட்டிலும் நன்றி கெட்டவர்கள் யார்?

நீந்தா இன்னலின் நீந்தாமே
தேய்ந்தாறுத பெருஞ் செல்வம்
ஈந்தானைக் குனை ஈயாதே
ஒய்ந்தால் எம்மினுயர்ந்தார் யார்?

தாயே! நீ இறந்தால் அதற்காக உலகத்தையே அழித்தாலும் அந்த நஷ்டத்தை ஈடு செய்ய முடியுமா? இராமனின் விரத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக உன்னை வந்து விடுதலை செய்யும்படி சொல்லுகின்றாய். கர்மவீரரான இராகவன் எப்படியும் தன் கடமையில் தவறமாட்டார். விரத்தை விளக்குவதற்கு வேறு வழியே இல்லை என்று எண்ணுகின்றாய்? கற்புக்கரசியான சீதாபிராட்டி தன்னை இராவணன் தீண்டுதற்கு முன் இறந்து விடவேண்டும் என உயிரைவிட்டுவிட்டாள். சீதையே இறந்தபின் இராவணனைக் கொன்று என்னபயன்? மண்டோதரியாவது மங்கிலியத்துடன் இருக்கட்டும் என இராமபிரான் கருணையுடன் திரும்பி விட்டால் வீரம் விளங்காதோ?

பூண்டாள் கற்புடையாள் பொய்யாள்
தீண்டா வஞ்சகர் தீண்டாமுன்
மாண்டாளென்று மனந்தேறி
மீண்டால் வீரம் விளங்காதோ.

தாயே! உலகத்து மக்களாகிய உன்குழந்தைகளுக்காக நீ சிறிது நாள் துயரப்படக் கூடாதா? உன் காரணமாக இராவணவதம் செய்யப்பட்டு யாவரும் நன்மையடையப் போகின்றனர். இன்னும் ஒரு மாதம் இங்கிருக்க வேண்டாம். நான் இராமனைக் காணவேண்டியது தான். அவர் ஒரு கணங் கூடத்தாமதிக்கமாட்டார். உடனே வந்து விடுவார்

*ஈண்டொரு திங்கள் நீ இடரின் வைகவும்*
*வேண்டுவதன்று:யான் விரைவில் வீரனைக்*
*காண்டலே குறை: பின்னுங்காலம் வேண்டுமோ?*
*ஆண் தகை இனி ஒரு பொழுதும் ஆற்றுமோ?*

கூடிய சீக்கிரம் பெரியதொரு குரங்குச் சேனை இந்நாட்டை நோக்கிவரும். அதன் நடுவில் கருடன் மீதுவரும் திருமால் போன்று என் தோளில் இராமபிரானையும் அங்கதன் தோளில் இளையபெருமானையும் காண்பாய்" என்று அனுமான் கூற பிராட்டி சிறிது ஆறுதலடைந்து பேசுகின்றாள்.

"மாருதி! நான் பதட்டமாகக் கூறியவற்றை இராம பிரானிடம் கூறாது, முக்யமான விஷயங்களை மாத்திரம் அவரிடம் கூறுவாய். மேலும் இந்திரபுத்திரனான ஜயந்தன் என்பான்,ஒரு சமயமகாக்கை உருவம்கொண்டு இராமபிரான் எனது மடியில் தலைவைத்து படுத்திருக்கும் போது பெருவிரலைக்கொத்தினான். பெருமான் விழித்துக்கொண்டால் நித்திரைக்குப் பங்கம் ஏற்படுமே என நான் சகித்திருந்தேன். என் இரத்தம் அவர் மீது ஓர் துளிபட அவர் விழித்துக்கொண்டு செய்தியறிந்து ஒரு புல்லை எடுத்து பிரம்மாஸ்திரமாக ஏவ ஜயந்தன் நடுங்கிஎல்லா உலகங்களுக்கும் ஓடி எவரும் அவனைக்காப்பாற்றமறுக்க இராமபிரானிடமே திரும்பி வந்து சரண் அடைய, அவர் இராமபாணத்தால் ஒரு கண்ணைக்குத்திக் குருடாக்கி ஜயந்தனுக்கு உயிர்ப் பிச்சையளித்தார். இதை ஒரு அடையாளமாக இரகுபுங்கவரிடம் கூறு. ஒரு சமயம் புதியதாக வாங்கிய கிளி ஒன்றிற்கு என்ன பெயரிடலாமென்று நான் கேட்க

பெருமான் "என் அன்னையான உத்தமி கைகேயியின் பெயரிடு" எனக் கூறினார். இதையும் மற்றொரு அடையாள மாகக் கூறு" என்கிருள்.

என்னொரின்னுயிர் மென்கிளிக்குயார் பெயரீகேன்
மன்ன வென்றலும் மாசறுகேகயன் மாது என்
அன்னை தன் பெயராகென அன்பினொடு அந்நாள்
சொன்ன மெய்ம்மை சொல்லுதி மெய்ம்மை
[தொடர்ந்தோய்

இவ்வாறு அடையாளங்கள் கூறிய அம்மை ஏதாவது ஒரு பொருளை இராமபிரானுக்கு அடையாளமாக அனுப்ப வேண்டும் என எண்ணித்தன் ஆடையில் ஒளித்துவைத்த அழகிய சூடாமணி என்னும் ஆபரணத்தை எடுக் கின்ருள். அதன் ஒளிகண்டு அனுமான் 'இது என்ன' என்று பிரமிக்கின்ருன். "இது சூடாமணி! என் கண்மணிபோல் வெகு நாள் இதை காப்பாற்றி வைத்திருக்கிறேன். இதை இராமபிரானிடம் கொண்டு போய்க் கொடு" எனக்கொடுக் கின்ருள். அம்மையிடம்அதனைத் தொழுது பெற்றுக் கொண்ட அனுமான் அவளை மும்முறை வலம் வந்து ஆசி பெற்றுப்புறப்படுகின்ருன்.

சூடையின் மணிகண்மணி யொப்பது தொன்னாள்
ஆடையின் கண் இருந்தது பேரடையாளம்
நாடிவந்தென தின்னுயிர் நல்கிய நம்பா!
கோடி என்று கொடுத்தனள் மெய்ப்புகழ்
[கொண்டாள்

கணையாழி காட்ட சிதாதேவி எடுத்துக் கொண்டாள் என்று மரியாதையைக் கூறிய கம்பன் அனுமனை அன்னை கொடுக்கும் சூடாமணியை "தொழுது வாங்கினன்" என்று கூறுவதன்மூலம் அனுமனுக்கு அன்னையிடம் உள்ள பக்தியையும் விநயத்தையும் புலப்படுத்தி விடுகின்ருன்!

சூடாமணி ஏது? அதுயாருடையது? இராவணன் சீதை யை எடுத்துச்சென்ற காலத்தில் தன் உடலிலிருந்த நகை

களைக் கழற்றி எறிந்த பிராட்டி இதைமாத்திரம் மறைத்து வைத்திருப்பானேன் என்று சிலருக்கு ஒரு ஐயம் ஏற்படலாம். ஒரு சமயம் பார்வதியுடன் பரமசிவன் விமானமேறி ஆகாய வீதியில் வரும் போது உலகமாதாவின் திருமுடியிலிருந்த ஜடை வில்லை தற்செயலாக வழுக்கி பூவுலகத்தில் ஜனகர் வீட்டு நிலா முற்றத்தில் வந்து விழுந்தது. சக்திதேவியின் ஆபரணமாகிய அந்த நகையை எவரும் எவ்வளவுபலங் கொண்டு நகர்த்தியும் அசைக்கவே முடியவில்லை. சீதா பிராட்டியாகிய குழந்தை அதைக் கையிலெடுத்து தன் இடையில் மறைத்துக் கொண்டாள். உலகமாதாவான உமாதேவிதவிர வேறுயாரும் சூடாத ஆபரணமான படியால் சூடாமணி எனப் பெயர் பெற்றது. சிவதனுசை ஒடித்து சீதாபிராட்டியைத் திருமணம் செய்து கொண்ட அன்று தினமே இரவு ராமபிரான் தேவியிடம் சிவதனுசின் பெருமையை எடுத்துக் கூற, பிராட்டியார் தன்னிடமும் சக்தியின் ஆபரணம் இருப்பதாகக் காட்டினுள். "சீதைக்கும் இராமபிரானுக்கு அந்தரங்கமாகத் தெரிந்து கொண்ட சூடா மணியைக் கொடுத்தால் இராமபிரான் தன்னைச் சந்தித்தான் அனுமான் என்ற உண்மையைச் சந்தேகமறத் தெரிந்து கொள்வார்" என்றே பிராட்டியார் அனுமனிடம் சூளாமணி கொடுத்தனுப்பினுள் என்பர் பெரியோர்.

## 8. அரக்கர் அழிவும் அமரர் களிப்பும்!

சூளாமணி பெற்ற அனுமான் இலங்கையைவிட்டுப் புறப்பட எண்ணும் போது தனக்கு இன்னும் ஏதோ வேலை பாக்கியிருப்பதாகத்தானே எண்ணிக் கொள்ளுகிறுன். "கணையாழி காட்டிச் சூளாமணிபெற்றது சிறியகாரியம். இத் துடன் புறப்படக் கூடாது. எனவே பெரிய காரியம் ஏதாவது செய்தால்என்ன? என்ன செய்யலாம்! அயோக்ய அரக்கனை இராவணனை வாலில் கட்டியடித்து வாயில் ரத்தம்கக்கச் செய்து சிறையில் வைத்தால் என்ன? இல்லை! இல்லை! சீதாபிராட்டியை ராவணன் சிறையில் வைத்தான். நாமும்

மண்டோதரியைக் கூந்தலைப்பிடித்துச் சிறையில் கொண்டு வைத்தால் என்ன? ஆஹா! மண்டோதரி உத்தமியன்றோ? கணவன் செய்த குற்றத்திற்கு அந்த கற்புக்கரசியை தண்டிக்க என்னநியாயம் உள்ளது? அவள் கண்ணீர் விட்டால் அந்தக் கற்புக்கரசியின் கண்ணீர் இராமனுக்குக் கெடுதலையுண்டுபண்ணி விடும். வேறு என்ன செய்யலாம்? எப்படியாவது இவர்களுக்கு நம் வலிமையைக் காட்ட வேண்டும். அதற்குவழி: இந்த அசோகவனத்தில் உள்ள மரங்களை அழிப்பேன். அதன் சத்தங்கேட்டு அரக்கர்கள் என்னை அடிக்க வருவார்கள். அவர்களைத் திருப்பியடிப்பேன். அவர்கள்மாள்வார்கள். வரும்யாவரையும்கொன்றுவிட்டால் ராவணனும் வருவான். அவனையுங் கொல்லலாம்.

வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால்
வெந்திறல் அரக்கனும் வெலற் கரு வலத்தான்
முந்து மெனில் அன்னவன் முடித்தலை முசித்தென்
சிந்தையுறு கோபமும் அவித்தினிது செல்வேன்

என்று முடிவு செய்த அனுமானின் எண்ணம் செயலாக மாறுகிறது.

முடிந்தன: பிளந்தன: முறிந்தன: நெரிந்த:
மடிந்தன: பொடிந்தன: மறிந்தன: முறிந்த;
இடிந்தன: தகர்ந்தன: எரிந்தன: கரிந்த:
ஒடிந்தன: ஒசிந்தன: உதிர்ந்தன: பிதிர்ந்த

என்ற மந்திரக் கவிதையில் மரங்கள் முறியும் ஓசை நம் காதுக்கு கேட்கின்றதல்லவா? அனுமான் மரங்களைப் பெயர்த்து ஆகாயத்தில் விட்டு எறிய அவைகள் ஆகாயத்தில் வரிசையாக நிற்கின்றன. தேவமகளிர் அசோகவனத்து மலர்களைத் திண்டித்தங்களுக்கு எடுத்துக் கொண்டதேயில்லை. இராவணன் வீட்டு வேலைக்காரிகளாகிய அவர்களுக்கு அது கிடைக்கவில்லை. அசோகவனத்து மலராயிருந்தால் தானே கிடைக்காது? அனுமான் அசோகவனத்தில் இருந்த மரங்களை ஆகாயத்தில் விட்டெறிந்து

"விண்ணும் ஒரு சோலையுளதாமென விரித்தான்" ஆதலால் தேவமாதர்கள் இறங்கி வந்து அந்தரத்தில் தோங்கும் அந்த தோட்டத்தில் (Hanging Garden) பூப்பறிக்கின்றனர்.

விஞ்சையுலகத்தினும் இயக்கர்மலை மேலும்
துஞ்சுதலில் வானவர் துறக்க நகரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கள் மொய்த்தனர் பறித்தார்
நஞ்சமணியானுடைய சோலையின் நறும்பூ.

இராவணன் விட்டு மரங்களெல்லாம் தங்கம் வெள்ளியால் ஆனவை. அவைகள் ஆகாயத்தில் அந்தரத்தில் தொங்கிய காலத்திலே நீண்ட விளக்குகள் வைத்து தீபாலங்காரம் செய்தமாதிரியிருந்தன என்கிறுன் கவிஞன்.

காசறு மணியும் பொன்னும் காந்தமும் கஞல்வதாய
மாசறு மரங்களாகக் குயிற்றிய மதனச் சோலை
ஆசைகள் தோறும் ஐயன் கைகளால் அள்ளி அள்ளி
வீசின விளக்கலாலே விளங்கின உலகமெல்லாம்.

இவ்வாறு அனுமன் அசோகவனத்தையழிக்கும் காலத்தில் அங்கிருந்த அரக்கிகள் "கைலேயைக் கையிலெடுத்து விளையாடிய இராவணன் ஊரிலா ஒரு குரங்கு இவ்வளவு அட்டகாசம் செய்கிறது?" என்று பேசுகின்றுர்கள். அனுமான் இது கேட்டு "கைலேயை எடுப்பது பெரியகாரியம் என்ற எண்ணம் இத்துடன் மறையவேண்டும். கைலாயத்தைக் காட்டிலும் கனமான ஏதாவது ஒரு பொருள் இருந்தால் அதை எடுத்து நான் ஆடினுல் இராவணனின இந்தக் கீர்த்தி அழிந்துவிடும்" என்ற எண்ணமுடையவனுக அங்கிருந்த ஒரு பெரியமண்டபத்தை எடுத்து இலங்கையின் மீதே வேகத்துடன் எறிய, இலங்கையின் ஒருபாகம் இடிந்து நாசமாகிறது. அது கண்டு அரக்கிமார்கள் அனுமனை நோக்கிவர அவர்களை விரட்டுகிறுன். தேவர்கள் சென்று அனுமானுடைய செயலை இராவணனிடம் கூறப் புகும் போது இராவணன் இருபது தலைகளும் குலுங்கி

நடுங்க ராக்ஷசப்பெண்களின் கருப்பம்கலங்கும்படி அனுமான் ஒரு ஆரவாரம் செய்கின்ருன்.

மண்டலம் கிழிய வாயின் மறிகடல் மோழை மண்ட
எண்டிசை சுமந்தமாவும் தேவரும் இரியல் போக
தொண்டைவாய் அரக்கிமார்கள் சூல் வயிறுடைந்து [சோர
அண்டமும் பிளந்து விண்டதா மெென அனுமன் ஆர்த்தான்

இருபது செவிகளிலும் அந்த ஓசை நுழைகிறது. ஒரு அலட்சிய சிரிப்பு முகத்தில் தோன்றுகின்றது. மனத்திலே பொருமை வேறு நம் ஊரில் நம்மிடம் பயமில்லாத ஒரு கர்ஜனையா என்று! சங்கதி யறிந்த இராவனன் அனுமனை எதிர்த்துச் சண்டை செய்து உயிரோடு பிடித்து வருவதற்காக எண்பதினுயிரம் கிங்கரர்களை அனுப்புகின்ருன். அவர்கள் மகாவிரர்கள் கீர்த்திமான்கள். பெருத்த உடல் உள்ளவர்கள். "சண்டை" என்ற வார்த்தையைக் கேட்டால் ஏதோ தேன் குடித்தமாதிரி சந்தோஷப்படுபவர்கள்.

நானிலம் அதனின் உண்டு போர் என நவிலின் [அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்: தெரித்தும் [என்னில்
கானினும் பெரியர்: ஓசை கடலிலும் பெரியர்: கீர்த்தி
வானினும் பெரியர்: மேனி மலையினும் பெரியர் [மாதோ.

"நமது அசோக வனத்தைப் பூவைத்தின்றுவாழும் ஒரு குரங்கா அழித்தது" என்று கேட்டுக் கொண்டுவருகின்ருர். பிரமாதமான கூட்டம். தெருவில் இடமில்லாது சிலர் ஆகாயவழியில் செல்லுகிருர். இலங்கை விரிவில்லை ஆகவே போகமுடியவில்லை என வழிபெருது விழிக்கிருர். அவர்கள் வரும்நேர்த்தியை, சேனைகள் யுத்தத்திற்காக படுவேகமாகக்

கால் வைத்து நடந்து செல்லும் அழகைக் கம்பன் தனது சந்தப்பாவில் அமைத்து விடுகின்ருன்.

அனைவரு மலையென நின்ருர்: அளவறு படைகள்
[பயின்ருர்:
அனைவரும் அமரில் உயர்ந்தார்: அகலிடம் நெளிய
[நடந்தார்;
அனைவரும் வரனினமைந்தார்: அசனியின் இடிகள்
[அணைந்தார்:
அனைவரும் அமரரை வென்ருர்: அசுரரையுயிரைய
[யின்ருர்

இது ராணுவத்தினர் போடும் (Left Right) நடையின் சத்தம் மாதிரி அமைந்துள்ளது. மலைகளைக் காலால் உதை என்ருலும், கடலைக்குடித்துவிடு என்ருலும், சூரியனை எடுத்து கீழே போட்டுவிடு என்ருலும், மேகங்களைத்துணி பிழிவது மாதிரிபிழி என்ருலும் உலகத்தைத் தாங்கும் ஆதிசேஷன் என்னும் பாம்பை எடுத்துத் தரையில் அறைந்து அடி- என்ருலும் ஒரே ராக்ஷசன் அவ்வளவையும் செய்து விடு வான் என்ருல் எண்பதினையிரம் பேர் என்ன செய்ய மாட்டார்கள்? அனுமான் இவர்களுடன் கைகலந்து சண்டையிடுகின்ருன். அவன் கைகளாலும் கால்களாலும் தோள்களாலும் பலரைக் கொன்று விடுகிருன். சிலரை விழித்துப் பார்த்தவுடன் இறந்துவிடுகின்றனர். சிலரை பாறையை எடுத்து விசி அடித்துக் கொல்லுகிருன். அவரவர்களுடைய வாளை யெடுத்துக் கொல்லுகிருன் சிலரை. அனுமான் அரக்கரை வதைக்கும் விரந்தைஇதோ பாருங்கள்!

ஓடிக் கொன்றனன் சிலவரை: உடல் உடல் தோறும்
கூடிக் கொன்றனன் சிலவரை: கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரை: பிணந்தொறும்
[தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரைக்: கறங்கெனத்
[திரிவான்.

அனுமன் தன்னுடைய வாலினால் கட்டி அரக்கர்களைக் கொன்றான். அனுமன் கருப்பஞ் சாறு பிழியும் யந்திரமாக மாறிவிட்டான் போலும்! அரக்கர் கரும்பு மாதிரி அன்ன வனால் நெறிக்கப்படுகின்றனர். சக்கைக் கரும்புகள் போல் பிணமாக கீழே விழுகின்றனர். இரத்தம் கருப்பஞ்சாறு மாதிரி கடலென்னும் பாத்திரத்தில் விழுந்தது. அனுமானால் கொல்லப்பட்ட அரக்கர்களின் இரத்தம் ஆறுபோல் ஓடி வருவது அவ்விலங்கை வாய் வழியாக இரத்தம் கக்குவது போலிருக்கின்றதாம். அந்தப் பெரிய போர்க்களத்திலும் அனுமன் தருமம் தவறவில்லை. சில அரக்கர்களை எடுத்து "கற்புக் கரசியான உன் மனைவி கண்ணீர்விட்டால் எமக்குக் குறைவேற்படும்" என எண்ணி அவரவர் வீட்டிற்கு அனுப்பி விடுகிறான். ஒரு பெண் உத்தமியாயிருந்தால் அவள் கணவனுக்கு ஆபத்துவந்தால்கூட விலகிவிடும் என்பது குறிப்பு. உலகத்து மக்களுடைய உயிரை வாங்குவதையே தொழிலாகக் கொண்ட யமனுடைய கைகூடச் சலித்து விட்டது. அனுமான் சலியாமல் அரக்கர்களை அடித்துக் கொண்டு இருக்கின்றான். இராவணன் ஏவலால் புறப்பட்ட அரக்கர் அனுமான் தம்மையழித்து விடுவான் என்று அறிந்தும் பயந்து ஓடவில்லை. விஷம் என்று அறிந்தும் குடித்து மரணமடைபவரைப் போல நிர்ப்பயமாய் அனு மனிடம் வரும் அரக்கர்களின் வீரத்தைக் கவிஞன் வியந்து பாடுகிறான்.

*எஞ்சல் அக்கணத்தறிந்திலம் இராவணன் ஏவ*
*நஞ்சமுண்டவராமென அனுமன் மேல் நடந்தார்*
*துஞ்சினாரல்லது யாவரும் மறத்தொடு தொலைவுற்று*
*அஞ்சினாரில்லை! அரக்கரில் வீரர் மற்றியாரே!*

கிங்கரர்கள் யாவரும் மடிந்து விட்டனர். நந்தவனத்துக் காவலாளிகள் நடுங்கி ஓடுகின்றனர். இராவணன் "கிங்கரர் கள் எங்கே?" என்கின்றான் "பொய்ச் சாட்சி சொல்லும் பாவி களுடைய குடும்பம் எப்படி ஒருவர்கூட பாக்கியில்லாமல் அழிவாரோ அம்மாதிரி கிங்கராகள் ஒருவர் கூட பாக்கி

யில்லாமல் அழிந்துவிட்டார்" என்கின்றனர்.

"சலந்தலைக் கொண்ட அவ்வரக்கர் தன்மையால்
அலந்தலர் செருக் களத்து அஞ்சினர் அலர்,
புலந்தரு பொய்க்கரி புகலும் புன்கணார்
குலங்களில் அவிந்தனர் குரங்கினால்" என்றார்.

அரக்கர் எண்பதினாயிரர் அழிந்தது பற்றிக் கூறும் கம்பன் பொய்ச் சாட்சி சொல்லும் குடும்பம் வேரோடு அழிவது மாதிரி என உதாரணம் கூறுவது பொய்ச்சாட்சி கூறுவதால் ஏற்படும் பயங்கர விளைவையும், கம்பனுக்கு நீதியிலுள்ள பற்றுதலையும், நம்பிக்கையையும் காட்டுகின்றது.

அடக்க முடியாத கோபமடைந்த இராவணன் "கிங்கரர்களை கொன்ற அக்குரங்கைத் தாம்புக் கயிற்றால் கட்டிக் கொண்டுவாருங்கள்" என்று சம்புமாலி என்னும் சேனாதிபதியை அனுப்புகின்றான். பலர் இருக்க என்னை இந்தப் பணிக்கு ஏவினார் என்ற பெருமிதம் கொண்டு போருக்குச் செல்லும் ஜம்புமாலி இராவணனின் கோபமே உருவெடுத்துச் சென்றமாதிரி சென்றான் என்கிறான் கவிஞன். பத்தாயிரம் தேர்கள், இருபதினாயிரம் யானைகள், நாற்பதாயிரம் குதிரைகள், எண்பதினாயிரம் காலாட்களும் கூடச் செல்கின்றனர். அணிவகுத்துச் சென்ற சேனைக்கு எதிரில் தானும் அணிவகுத்த மாதிரி நிற்கின்றான் அனுமான். தனது நெற்றியே முன்படையாகக் கொண்டான். நெய்யிட்டு ஒளிகொண்டு விளங்கும் தீபம் போல் இருக்கின்றது அவனுடைய நெற்றி. அவனுடைய உடம்பு பூராவும் சிலிர்த்து நிற்கும் மயிர்த் தொகுதிகளே நடுப்படையாகவும், கூரிய நகங்களுடன் கூடிய கைகளே பக்கப்படைகளாகவும், தன் வாலை பின்னணிப் படையாகவும் வைத்துக் கொள்ளுகிறான் என்கின்றான் கவிஞன்.

ஐயனும் அமைந்து நின்ருன்: ஆழியான் அளவின்
[நாமம்
நெய் சுடர் விளக்கில் தோன்றும் நெற்றியே
[நெற்றியாக:
மொய்மயிர்ச் சேனை பொங்க: முரண் அயில்
[உகிர்வாள் மொய்த்த
கைகளே கைகளாக; கடைக் கூழைத்திருவாலாக

அவ்வாறு அமைந்த அனுமான் அரக்கரை கையால் அழுத்திப்பிசைந்தும் எழுவாயுதம் கொண்டும் கொல்ல லானுன். அனுமான் போர்க்களத்தில் திரிந்து அரக்கரை அழித்த செயல் நாம் ஏதோ விளையாட்டின் போது ரேடியோவில் கேட்கும் (Running Commentary) மாதிரியமைகின்றது. இதோ அந்தக் கவிதையைப்பாருங்கள்.

இருந்தனன்; எழுந்தனன்; இழிந்தனன்; உயர்ந்தான்:
திரிந்தனன்: புரிந்தனன என நனி தெரியார்;
விரிந்தவர்; குவிந்தவர்; விலங்கினர்; கலந்தார்:
பொருந்தினர்; நெருங்கினர் களப்படப் புடைத்தான்

இவ்வாறு அரக்கர்களை அழிக்கும் அனுமன் எதிரில் தோன்றுகிருன் சம்பு மாலி "கூட வந்தவரைக் காப்பாற்றுவதற்கு கையாலாகாதவனே! எளியவனுன உன்னை நான் கொல்ல விரும்பவில்லை. ஊருக்குத் திரும்பிப்போ" என்கின்ருன். தனது பெரிய பகைவனுன இராவணனையே "இன்று போய் போர்க்கு நாளைவா" என மறக்கருணை செய்யக் கூடிய மன்னவனுகிய இராமபிரானுடைய தூதனல்லவா? அதனுலேயே போலும் சம்புமாலியைப் போகும்படி கூறுகின்ருன் அனுமான். "ஆஹா! உன் கருணையே கருணை! போரில் சாகப்போகிறவன் என்ருஎன்னைக் கூறுகிருய்?" எனச் சிரித்து அனுமான்மீது ஆயிரக்கணக்கான அம்புகளை விடுகிருன். "செய்யப்பா! செய்! கையில் வில்லை எடுத்து வெறுங்கையோடிருப்பவரை அடிப்பது என்ன பிரமாதம்!" என்று கூறி அவனுடைய பாணங்களை எழுவாயதத்தால் தடுக்கின்ருன்.

அவைகளைத் தடுக்கும் எழுவாயுதத்தை சம்புமாலி அறுத்தி வீழ்த்தி விடுகின்றான்: இதுகண்டு சலிப்படைந்த அனுமான் திடீரென்று கீழே குதித்து ஜம்புமாலியின் கையிலுள்ள வில்லைப்பிடுங்கி அதை அவன் கழுத்தில் இட்டு இழுக்க அந்த வில்லின் நாண் கயிறு அவனுடைய தலையைத்துண்டாக்கி விடுகின்றது. இந்தப் பயங்கரத்தைக் கண்ட இராவணனின் வேலையாட்களில் சிலர் சம்புமாலி மரணமடைந்தவிஷயத்தை அவனிடம் சென்று கூற பெருங் கோபங் கொண்ட இரா வணன்தானே குரங்கைக் கொல்லப் புறப்படுவதாகக் கூறு கின்றான்.

"கேவலம் சிலந்தியை உண்டு வாழுங் குரங்கிடம் நீ போருக்குச்சென்றால் என்ன நேரும் தெரியுமா? உன் பெய ரைக்கேட்டால் நடுங்கும் திசையானைகள் உன்னை அலட் சியம் செய்யும். வெறி கொண்டுவிடும். கருடன் கொசுவின் மீது செல்லுவது மாதிரி அரக்கனாகிய நீ குரங்கிடம் சென்று போர் புரிந்தால் இரவும் பகலும் உன்னை நினைத்து பயந்து நடுங்கும் கைலாயத்திற்கு பயந்தெளிந்து விடும். உன்னை நினைக்கும் போதே பயத்தினால் சுருங்கும் தேவர்களின் தலைவராகிய மும்மூர்த்திகளின் முகங்கள் உனக்குச் சிறிது சிறிதாக பலங்குறைந்து விட்டது என்ற எண்ணத்தில் புன் முறுவல் பூக்கும். மேலும் உனக்கு ஆள் பலம் இல்லை என நினைக்கும் இவ்வுலகா். ஆகவே இத்தக்காரியத்திற்கு நாங் களே புறப்படுகின்றோம்" என்று போருக்குப் புறப்படும் இரா வணனைத்தடுத்துப் பேசுகின்றார்கள் பஞ்சசேனாபதிகள் என்ற ஐந்து படைத்தலைவர்கள். இராவணனுடைய அனுமதி பெற்றுப் பெரிய படையுடன் புறப்படுகின்றார்கள். மகாவீரர்களான இவ்வைவரின் உடலிலும் சிவபெரு மானுடைய திரிசூலம், இந்திரனின் வச்சிராயுதம் முதலான வற்றை விட்டாலும் ஒன்றும் செய்யாது. நெற்றியில் முருகப் பெருமானின் ஊர்தியான மயில் தோகையையும் பிரமனின் வாகனமாகிய அன்னத்தின் சிறகையும் கோர்த்து வீரகட்டியாக அணிந்து கொண்டிருக்கின்றார்கள். இந்திரனு டைய யானையான ஐராவதம் வேகமாகச் சென்றால்

அதை வாலைப்பிடித்து நிறுத்திவிடக் கூடியவர். மலைகளைப் பரிகசிக்கும் மார்புடையவர். கடல் அலைகளைப் பரிகசிக்கும் வேகமான கையுடையவர். அந்தகனுன யமனைப் பரிகசிக்கக் கூடிய கொலைகாரர். கண்கள் கொல்லனின் உலையைப் போன்றுள்ளவர்கள்.

மலைகளை நகுந்தடமார்பர்: மால்கடல்
அலைகளை நகுநெடுந்தோளர்; அந்தகன்
கொலைகளை நகுநெடுங் கொலையர்; கொல்லன்ஊது
உலைகளை நகும்அனல் உமிழுங்கண்ணினர்.

இப்படிப்பட்ட பலசாலிகளான அரக்கர் தலைமையில் அனுமானை நோக்கிவரும் சேனையைக் கண்டு இராவணனது இந்த சைன்யம் அனுமானைக் கொன்று விடுமோ என்ற பயமும் அனுமானது தனிமை கண்டு இரக்கமும் அடைகின்றனர் தேவர். அனுமானே "இன்றைக்குள்ளேயே அரக்கர் அழிந்து விடுவர் போலிருக்கிறது" என்று மகிழ்ச்சி கொள்ளுகிருன். போர்மூண்டுவிட்டது. அனுமான் இரண்டு தேர்களை இரண்டு கைகளில் எடுத்து இரண்டுயானையை உருட்டி இரண்டுயானைகளை எடுத்து குதிரைகளைக் கொல்லுகிருன். இவ்வாறு சைன்யம் அழிந்த பின் பஞ்சசேனுபதிகளான ஐவரும் அனுமனை எதிர்க்கின்றனர். அனுமான் ஒருவனை மழுவாயுதத்தால் கொன்றுவிடுகிருன். அடுத்தவனை ஆகாயத்தில் எடுத்தெறிந்து அவன் கீழே விழுவதற்குமுன் அவனை பாய்ந்து மிதித்துக் கொன்று விடுகிருன். மற்ற இருவரைவாலால் நெருக்கிக் கொன்று விடுகிருன். அடுத்தவனை அவனுடைய தேரில் மேல் குதித்து தேரோடு புதைத்து விடுகிருன். ஐவரையுங் கொன்ற அனுமான் பஞ்சபூதங்களை வென்ற நல்லறிவாக விளங்குகின்ருன் என்கிருன் கவிஞன் இராவணனின் ஏவலாளர் சென்று "சைன்யம் அழிந்து. விட்டது. பஞ்சசேனுபதிகளும் இறந்து விட்டார்கள். நாங்கள் சண்டையிடாததால் திரும்பிவந்தோம். யாவரையும் கொன்ற அக்குரங்கு இன்னும் வேறு யாரையும்

காணுமே எனச் சோம்பல் முறித்துக் கொண்டு உட்கார்ந் திருக்கின்றது." என்கின்றனர்.

*தானையும் உலந்தது; ஐவரும் தலைவர் சமைந்தார்;*
*[தாக்கப்*
*போனபின் மீள்வேம் யாமே: அதுவும் போர்*
*[புரிகிலாமை:*
*வானையும் வென்றுளோரை வல்லையின்மடிய நூறி*
*ஏனையர் இன்மை: சோம்பியிருந்தது அக்குரங்கும்*
*[என்றார்.*

பஞ்சசேனாபதிகள் கொல்லப்பட்டதைக் கேட்ட இராவணன் மீண்டும் தானே போருக்குப் புறப்படுவதாகக் கிளம்புவதை;அவனுடையமகனான ஆட்சகுமாரன் என்பவன், "சிவபெருமானின் வாகனமான ரிஷபமேயானாலும், திருமாலின் வாகனமான கருடனோ அல்லது ஆதிசேஷனானாலும், எட்டுதிக்குகளிலுள்ள திக்கஜங்களானாலும் சரி. நீ நேரில் சண்டையிடலாம். கேவலம் குரங்குடன் சண்டையிடலாமா? இந்தக் கடமையை எனக்குக் கொடு. தேவேந்திரனையே பிடித்துவரச் சொன்னால் கூட நானிருக்கிறேன். யாராயிருந்தாலும் நான் பிடித்து வருகிறேன்" என்று கூறித்தடுத்துத் தானே புறப்படுகின்றான். சமுத்திரத்திலுள்ள மீன்களைக் காட்டிலும் அதிகமான யானைகள்: நக்ஷத்திரங்களை எண்ணினாலும் எண்ணிவிடலாம்: தேர்களை எண்ண முடியாது: மணலை எண்ணினாலும் எண்ணலாம்: கூட வந்த சேனையை எண்ண முடியாது: கடல் அலையை எண்ணினாலும் எண்ணலாம் குதிரையைஎண்ண முடியாது.மொத்தம் இரண்டுலட்சம் வீரர்களுக்கு மேலிருக்கலாம். அவர்கள் கொண்டுவந்த ஆயுதங்கள்.

*தோமரம்: உலக்கை; சூலம்: சுடர்: மழு: குலிசம்:*
*[தோட்டி*
*ஏமருவரிவில்; வேல்; கோல்; ஈட்டி; வாள்: எழு;*
*[விட்டேறு*
*மாமரம்: வீசுபாசம்; எழு: வயிரத் தண்டு*
*காமருகணையம்; குந்தம்; கற்பணம்: கால நேமி.*

பழைய காலத்து ஆயுதங்களின் பெயர்களைப் பாருங்கள். காகமும் கழுகும் அட்சகுமாரனையும் சைன்யத்தையும் சுற்றித் தீயசகுனம் காட்டுகின்றன. அவன் வருவது கண்ட அனுமான் "இராவணனோ இந்திரஜித்தோ வருகின்றார்! எவராயிருந்தாலும் என் மனத்திலுள்ள விருப்பம் நிறைவேறும்" என்று தன் தோள்களைப் பார்த்து சந்தோஷிக்கின்றான்.

இந்திரஜித்தோ! மற்றவ்விராவணனேயோ! என்னாச்
சிந்தையின் உவகை கொண்டு முனிவுற்ற குரக்குச்
[சீயம்
வந்தனன் முடிந்தன்றோ மனக்கருத் தென்ன
[வாழ்த்திச்
சுந்தரத் தோளை நேர்க்கி இராமனைத் தொழுது
[சொன்னான்.

"யார்? பத்துத்தலைகள் இல்லையே! அதனால் இராவணன் இல்லை, இந்திரனை வென்ற மேகநாதனும் இல்லை! முருகனும் இல்லை. யார் இவன்?" என யோசிக்கும் வேளையில் அட்சகுமாரன் தன் தேர்ப்பாகனை நோக்கி "இந்தக் குரங்கா இவ்வளவு பேரைக் கொன்றது?" என்கின்றான். "இளவரசே! குரங்கென்று அலட்சியம் செய்ய வேண்டாம். நம் அரசனாகிய இராவணனுடன் எதிர்த்த வாலியும் குரங்குதானே?" என்கிறான். "இந்தக் குரங்கைக் கொன்று குரங்கு வம்சம் பூராவையுமே ஒழிக்கப் போகிறேன்! பார்" என்று சபதம் செய்கிறான். அனுமான்சண்டையை ஆரம்பிக்கிறான். கிங்கரர் எண்பதினாயிரர், சம்புமாலியும் அவன் சேனை, மற்றும் பஞ்சசேனாபதிகளும் அவர்களின் சைன்யம் இவ்வளவு பேரையும் அனுமான் க்ஷணநேரத்தில் கொல்லுகிறானே! யமதூதர்கள் எத்தனைபேர் இருந்தால் இவ்வளவு உயிரையும் எடுத்துச் செல்ல முடியும்?

"ஆயிர கோடி தூதர் உளர்கொலோ! நமனுக்கம்மா!"



என்று ஆச்சரியமடைகிறான் கம்பன்.

அனுமான் தயிர்போல் பரந்திருக்கும் அரக்கர் சைன்யத்தின் நடுவில் மத்தைப் போல் சுழன்று அவரை அழிக்கின்ருன். அரக்கரும் அனுமானும் சண்டையிடுவதை அமரர்கள் அதிசயத்துடனும் பயத்துடனும் நோக்குகின்ருர். அனுமான் திடீரென்று அட்சகுமாரனைப் பிடித்துத் தரையோடு தேய்த்துக் கொன்று விடுகின்ருன். பக்கத்திலிருந்த சில அரக்கர்கள் பயந்து பல பல வேடங்களில் ஓடலாயினர். சிலர் கடலுக்குள் ஓடினர்! சிலர் பசுவாக மாறிப் புல் மேய்ந்தனர்! சிலர் பெண்ணுருவம் கொண்டனர்! ஆனல் அனுபவம் கிடையாத வேடமல்லவா? கூந்தலைப் பின்னல் வாரி நீவிக் கொள்வதற்கு பதிலாக முன்னே விரித்துக் கொண்டு வாரி ஒழுங்கு செய்யப் பார்க்கின்றனர்! சிலர் வேத மோதும் வேதியர் வேடங் கொண்டனர்! சிலர் நேராக நின்று "ஐயா! சரணம்! காப்பாற்ற வேண்டும்" என்று கைகூப்புகின்றனர். இந்நிலையில் இராவணனுடைய இடம் நோக்கி காவலாளிகள் ஓடிச் சென்று விஷயத்தை கூற வந்ததைக் கண்டு "ஐயோ! என்மகன் அட்சகுமாரன் இறந்தான் என்று கூறுவதற்காக இவர்கள் வருகின்ருர்களே" என்று அலறிக் கொண்டு இராவணனின் கால்களில் விழுந்து அலறுகின்ருள் அவனுடை மனைவியான மண்டோதரி. அட்சகுமாரனின் மரணம் கேட்டு அரக்கனை இராவணனின் கால்களில் விழுந்து யாவரும் அழுதனர்.

தாவருந்திரு நகர்த் தையலார்முதல்
யாவரும் இடை விழுந்து இறங்கி ஏங்கினர்
காவலன் கால் மிசை விழுந்து

என்று கூறும் கம்பன் மற்ருெரு விஷயத்தை மிக அழகாகக் கூறிவிடுகிருன். யாவரும் அழுதனர். இராவணனுடைய வேலைக்காரர்களான தேவர்கள் கூட அழுதனர் என்கிருன். அரக்கர் அழிந்ததையும் இராவணனின் சோகத்தையும் கண்ட தேவர் அழமாட்டார். ஆனல் இராவணனிடம் அன்று அடிமையாயிருந்தபடியால் அழவேண்டியிருந்தது. பின் என்ன செய்தார்? எல்லாரும் துக்கத்துடன் அழும்போது

"..........................................காவன்மாத்
தேவரும் அழுதனர் களிக்குஞ்சிந்தையார்"
என்று தேவர்கள் நிர்ப்பந்தத்திற்காக சந்தோஷமாகவே அழுதனர் என்று ஹாஸ்யமாகவேகூறுகிறான்.

## 9. ஸ்ரீ ராமதூதன் அனுமான்.

அட்சகுமாரன் இறந்ததற்காக அனைவரும் அழுவது கண்டு ஒருவன் தரங்கொள்ளாத துக்கமும் கோபமும் கொண்டு தன்வில்லைப் பார்த்துப் பல்லைக் கடிக்கிறான். "இந்தக் குரங்கு என் தம்பியையா தரையில் தேய்த்தது? என் தந்தையின் கீர்த்தியையல்லவா தேய்த்து விட்டது" என்று எண்ணி மனமுளைந்து இராவணனிடம் வந்து கண்ணீருடன் பேசுகின்றான். "அப்பா! நீ ஒன்றும் யோசிக்க வில்லை. குரங்கின் ஆற்றலையறியாது அரக்கர் பலரை ஏவி அவர்கள் கொலலப்பட்டபின் குரங்கு கொன்று விட்டது என்று அழுகிறாய்! நீ அனுப்பினதாலல்லவா குரங்கு கொன்றது? ஆகவே நீ தான் அரக்கருடைய அழிவிற்குக் காரணம்! கிங்கரர், சம்புமாலி, பஞ்சசேனாபதிகள், அட்ச குமாரன் இவர்கள் கூடச் சென்ற சைன்யங்களில் ஒருவர் கூடத்தப்பாமல் மடிந்து விட்டனர். என்றால் அந்தக் குரங்கு பிரமன், திருமால், சிவனை நிகர்த்ததன்றோ! எதற்கும் நீ அஞ்சாதே! நான் குரங்கைப் பிடித்து வருகின்றேன்" என்று சினத்துடன் கூறி போருக்குப் புறப்படுகின்றான். "ஐயோ! குரங்கு நம் படைகளில் பெரும் பாகத்தைக்கொன்று விட்டதே! இராமன் வந்தால் அவனை எதிர்க்க நம் சைன்யம் போதுமா? என் அத்தை மூக்கிழந்தாள். மாமனான கரன் முதலானவர் கொல்லப்பட்டனர். இப்போது என் தம்பியும் அழிந்துவிட்டான். இவையாவும் மனிதர் இருவராலும் குரங்கு ஒன்றினாலும் என்றால் நான் வீரனா!" என்று மன முடைந்து போர்க்களம் வரும் போது தரையில் தேய்க்கப் பட்டுக் கீழே விழுந்து கிடக்கும் தன் தம்பியின் உடலைக் கண்டு "உன்தந்தையையும் என்னையும் எண்ணி யாருமே பயப்படுவார். நீ எந்த உலகஞ் சென்று விட்டாயடா தம்பி!" என்று பதறுகிறான்.

"ஆஹா! இதற்குமுன் சில வீரரைக் கொன்றதால் இந்திரஜித் வருகிறான். இன்றோடு இவனும் அழிந்து விடுவான்! இராவணனும் சீதையை விட்டு விடுவான்! தேவர்களின் துயர் தீரும்!" என்று அனுமான் எண்ணி தன் எதிரில்வந்த யானை முதலானவற்றை காலால் உதைத்து சண்டையிடலானான்.

உதையுண்டன: யானையுருண்டன: யானை ஒன்றோ
மிதியுண்டனயானை: விழுந்தன யானை: மேன் மேல்
புதையுண்டன யானை: புரண்டன யானை: போரால்
வதையுண்டன யானை: மறிந்தன யானை மண்மேல்

அவ்வாறே தேர்களையும் குதிரைகளையும் அரக்கர்களையும் அழிக்கிறான். இந்திரஜித்தின் தேர், சாரதி இவைகளை அனுமான் அழிக்க, வேறொரு தேர் ஏறி இந்திரஜித் சண்டைக்கு வருகின்றான். திடீரென்று அனுமான் ஒரு மர மெடுத்து இந்திரஜித்தின் தலையில் அடிக்கிறான். இம்மாதிரி அடிக்கும் தப்பிய அவன் அனுமனை பிரமன் படையால் தான் வெல்ல வேண்டுமென எண்ணி ஒரு அம்பை எடுத்து அதில் பிரமனின் மந்திரம் கூறிப் பூஜித்து அதனை அனுமான் மீது ஏவுகின்றான்! பிரமாத்திரமானது அனுமானைக் கட்டி விடுகின்றது. இல்லை, இல்லை! இது பிரமன் படையென்றறிந்து அதற்கு அனுமான் மரியாதை கொடுத்து மீறாமல் கட்டுப் பட்டிருந்தான் என்கிறார் கம்பர். குரங்கிற்கு பலம் குறைந்து விட்டது என்று எண்ணிய அரக்கர் ஆரவாரம் செய்தனர். சுருங்கக் கூறின் இந்திரனை மேகநாதன் கட்டி வந்த அன்றையதினம் அரக்கர் என்னமாதிரி மகிழ்ச்சி கொண்டனரோ அம்மாதிரி அன்று இலங்கை பூராவும் ஒரே கோலாகலம்.

"அம்பு கொண்டு எய்யுங்கள்! கத்தியால் குத்துங்கள்! தடியால் தாக்குங்கள்! குடலைத் துண்டு செய்யுங்கள்! தரையில் தேயுங்கள்! தின்னுங்கள்" என்றெல்லாம் அரக்கர்

தெருவோடு அனுமான் அழைத்துச் செல்லப்படும் போது கத்துகின்றார்கள்.

"என் தம்பி, தகப்பன் யாவரையும் கொன்ற குரங்கே! அவரைத்தந்தால்தான் நீ மேலே போகலாம்" இது ஒரு ஒரு வீட்டாரின் முறையீடு.

"என் கணவனை இந்தக் குரங்கு கொன்று விட்டது. இதன் தலையை வெட்டினால்தான் என தாலியை நீக்குவேன்" எனக் கதறுகின்றாள் கணவனை இழந்த கைம் பெண் ஒருத்தி. சில அரக்கர்கள் "இந்தக் குரங்கை நம்பக் கூடாது, எப்போது கட்டவிழ்த்துக் கொண்டு புறப்படுமோ" என ஓடுகிறார்கள். இலங்கை பூராவும் அனுமானின் ஊர் வலத்தை வேடிக்கை பார்க்கிறது.

அனுமனோ "அடங்கியேயிருப்போம். இராவணனைக் காண இதுதான் சந்தர்ப்பம். ஒரு வேளை நல்ல புத்தி கூறினால் அவன் சீதையை விட்டு விடலாம். இராவண னுடைய மனநிலை, அவனுடைய நண்பர்கள் பற்றி அறியலாம். வாலி கொல்லப்பட்ட செய்தி முதலியவற்றை யறிந்தால் ஒரு வேளை இராவணன் பயந்து சீதையை விட்டுவிடலாம். தூதனாகத்தான் போகவேண்டும்" எனத் தீர்மானித்துச் செல்கின்றான். இந்நிலையில் இராவணனது அரண்மனையை அடைகின்றான் அனுமான்.

இதற்குள்ளாக சீதாபிராட்டி விஷயம் தெரிந்து அன்னப் பறவை தன் குஞ்சு வேடன் கையில் அகப்பட்ட காலத்து வருந்திய மாதிரி வருந்தி அலறுகிறாள். "ஆகாயத்தை ஊடுருவிக் கடைசியில் அரக்கன் கையில் அகப்பட்டாய். கணையாழி காட்டி உயிர் கொடுத்தாய். அரக்கனைப் பழி வாங் கலாமென்றிருந்தேன். வீணாகி விட்டதே! என அலறி மூர்ச் சையாகிறாள். இது நிற்க.

மாதர்களின் பாடலும் மேனகையின் நாட்டியமும் இராவண சபையில் நடந்து கொண்டிருக்கின்றன. கம்பீர

மாகச் சிம்மாதனத்தில் அமர்ந்திருக்கும் இராவணனின் பத்து தலைகளும் பத்துக் காரியங்களில் ஈடுபட்டிருக்கின்றன. தன்னுடன் ஊடி விளையாடிய பெண்களைப் பார்த்துமகிழ்கிறது ஒருமுகம். தன்னுடன் கூடி விளையாடிய யனுபவித்த பெண் களைப் பார்த்துச் சந்தோஷிக்கிறது ஒரு முகம். ஆடக் கூடிய பெண்களைக் கண்டு ஆனந்தப்படுகின்றது ஒரு முகம். பாடக் கூடிய பெண்களைப் பார்த்துப் பரவசப்படுகின்றது மற்றொரு முகம். தேவர்களோடிருந்து ராஜ்ஜிய காரியங் களை கவனிக்கிறது ஒரு முகம். மும்மூர்த்திகளுடன் மந்திர சாஸ்திர ஆராய்ச்சி செய்கின்றது ஒரு முகம். இன்னும் என்ன பாவம் செய்யலாம் என யோசிக்கிறது ஒரு முகம். எட்டாத சீதை கிடைப்பாளோ மாட்டாளோ என ஏங்கு கிறது எட்டாவது முகம். சீதையின் கற்பாகிய கடலிலே நீந்தி இன்பக்கரையை எவ்வாறு அடைவது என யோசிக் கிறது ஒரு முகம். தன் பக்கத்தில் உள்ள தாழ்ந்த மாடியில் இருந்து மந்தகாசம் புரியும் பெண்களைப் பார்த்து சந்தோஷித்து பதில் சிரிப்பு சிரிக்கிறது பத்தாவது முகம். இப்பேர்ப்பட்ட இராவணனைக் கண்ட அனுமான் சிறுகிறான். "உறங்கும் போது கொல்லக் கூடாதென்றிருந்தேன். இன்று சிம்மாதனத்திலிருக்கிறான்" என எண்ணி பிரம்ம பாசத்தை விலக்க முயற்சித்த போது திடீரென்று மனம் மாறி "என்றால் இவனை அழிக்க முடியாது. இராமனால் தான் முடியும். என்றால் இவனை ஜயிக்க முடியாது, இவனால் என்னை ஜயிக்க முடியாது. சமபலமுடைய இருவரும் சண்டை யிட்டால் எத்தனை நாட்களாகுமோ? ஒருமாதம் தான் உயி ரோடிருப்பேன் என்ற சீதாபிராட்டி உயிர் விட்டு விட்டால்! வேண்டாம்! வேண்டாம்! நான் அவசரப்படக்கூடாது.

> இங்கொரு திங்களே யிருப்பல் யானென
> அங்கணுயகன்றனது ஆணை கூறிய
> மங்கையும் இன்னுயிர் துறத்தல் வாய்மையால்
> பொங்கு வெஞ்செருவிடைப் பொழுது போக்கினால்.

ஆதலால் தூதனாகவே சென்று பார்ப்போம்" என்று அனுமன் முடிவு செய்து கொள்ளுகிறான். இராவணன்

அனுமானைக் கண்டு "ஏ! குரங்கே! நீ யார்?" என்று கேட்டிருக்கலாம். ஆனால் அவன் தன் பயத்தைக்காட்டியும் மறைத்தும் பேசுகின்றான்.

"நீ திருமாலோ! தேவந்திரனோ! சிவபெருமானோ! பிரமனோ! ஆதி சேடனோ? உருவத்தையும் உடலையும் மறைத்து வந்த நீ யார்? நீ யமதூதனோ? கிரௌஞ்சத்தைப் பிளந்த முருகனோ! அல்லது யமனேயோ? திக்குபாலர்களில் நீயார்? யார் நீ? எதற்காகவந்தாய்? யாருனை விடுத்தவர்? நீ யாராயிருந்தாலும் சரி! பயமில்லாமல் சொல்" என்று கேட்கிறான் இராவணன்.

"நீ சொன்னயாரும் நான் இல்லை. நீ சொன்ன அந்த பலமற்றவர்களின் தூதனுமில்லை. சாதாரணமான வில்லை யுடைய ஒருவனுடைய தூதன் நான். மும்மூர்த்திகளும் நினைக்கக் கூடாதகாரியத்தைச் செய்து முடிக்கக் கூடியவன். ராவணா! நீ செய்த தவம், உன் பலம் யாவற்றையும் எம் இராமன் ஒரு பாணத்தை எடுத்து நீட்டினால் அழித்து விடும். எம்தலைவன் தேவனில்லை. வேறு யாருமிலலை. எட்டு திக்குப் பாலகனும் இல்லை. திக்கிலுள்ள யானையும் இல்லை. ஏன், நீ வணங்கும் பரமேஸ்வரன் கூட இல்லை, உலகத்தையாளும் ஒரு சாதாரண அரசனின் மகன்.

*தேவரும் பிறரும் அல்லன்: திசைக்களிறல்லன்;*
*[திக்கில்*
*காவலர் அல்லன்: ஈசன்கையிலையங்கிரியும் அல்லன்*
*மூவரும் அல்லன்: மற்றைமுனிவரும் அல்லன்:*
*[எல்லைப்*
*பூவலயத்தை யாண்டபுரவலன் புதல்வன் போலாம்.*

வேதத்திலும் தருமத்திலும் பேசப்பட்ட அப்பெரியோன் என்ன நினைந்தாலும் நடைபெறும். ஆதிமூலமே என்று யானை அழைத்தவுடன் ஓடிவந்து முதலையிடமிருந்து காப்பாற்றிய பெரியோன் அவன். ஆதி அந்தம் நடுவில்லாதவன். கையில் வில்லேந்தி எங்கிருந்து வந்தான் தெரியுமா? கைலையிலிருந்த பெரியோன் தன் சூலாயுதத்

மாகச் சிம்மாதனத்தில் அமர்ந்திருக்கும் இராவணனின் பத்து தலைகளும் பத்துக் காரியங்களில் ஈடுபட்டிருக்கின்றன. தன்னுடன் ஊடி விளையாடிய பெண்களைப் பார்த்துமகிழ்கிறது ஒருமுகம். தன்னுடன் கூடி விளையாடிய பனுபவித்த பெண்களைப் பார்த்துச் சந்தோஷிக்கிறது ஒரு முகம். ஆடக் கூடிய பெண்களைக் கண்டு ஆனந்தப்படுகின்றது ஒரு முகம். பாடக் கூடிய பெண்களைப் பார்த்துப் பரவசப்படுகின்றது மற்றொரு முகம். தேவர்களோடிருந்து ராஜ்ஜிய காரியங்களை கவனிக்கிறது ஒரு முகம். மும்மூர்த்திகளுடன் மந்திர சாஸ்திர ஆராய்ச்சி செய்கின்றது ஒரு முகம். இன்னும் என்ன பாவம் செய்யலாம் என யோசிக்கிறது ஒரு முகம். எட்டாத சீதை கிடைப்பாளோ மாட்டாளோ என ஏங்குகிறது எட்டாவது முகம். சீதையின் கற்பாகிய கடலிலே நீந்தி இன்பக்கரையை எவ்வாறு அடைவது என யோசிக்கிறது ஒரு முகம். தன் பக்கத்தில் உள்ள தாழ்ந்த மாடியில் இருந்து மந்தகாசம் புரியும் பெண்களைப் பார்த்து சந்தோஷித்து பதில் சிரிப்பு சிரிக்கிறது பத்தாவது முகம். இப்பேர்ப்பட்ட இராவணனைக் கண்ட அனுமான் சீறுகிறான். "உறங்கும் போது கொல்லக் கூடாதென்றிருந்தேன். இன்று சிம்மாதனத்திலிருக்கிறான்" என எண்ணி பிரம்ம பாசத்தை விலக்க முயற்சித்த போது திடீரென்று மனம் மாறி "என்னால் இவனை அழிக்க முடியாது. இராமனால் தான் முடியும். என்னால் இவனை ஜயிக்க முடியாது, இவனால் என்னை ஜயிக்க முடியாது. சமபலமுடைய இருவரும் சண்டையிட்டால் எத்தனை நாட்களாகுமோ? ஒருமாதம் தான் உயிரோடிருப்பேன் என்ற பிராட்டி உயிர் விட்டு விட்டால்! வேண்டாம்! வேண்டாம்! நான் அவசரப்படக்கூடாது.

*இங்கொரு திங்களே யிருப்பல் யானென*
*அங்கணுயகன்றனது ஆணை கூறிய*
*மங்கையும் இன்னுயிர் துறத்தல் வாய்மையால்*
*பொங்கு வெஞ்செருவிடைப் பொழுது போக்கினால்.*

ஆதலால் தூதனாகவே சென்று பார்ப்போம்" என்று அனுமன் முடிவு செய்து கொள்ளுகிறான். இராவணன்

அனுமானைக் கண்டு "ஏ! குரங்கே! நீ யார்?" என்று கேட்டிருக்கலாம். ஆனால் அவன் தன் பயத்தைக் காட்டியும் மறைத்தும் பேசுகின்றான்.

"நீ திருமாலோ! தேவந்திரனோ! சிவபெருமானோ! பிரமனோ! ஆதி சேடனோ? உருவத்தையும் உடலையும் மறைத்து வந்த நீ யார்? நீ யமதூதனா? கிரௌஞ்சத்தைப் பிளந்த முருகனோ! அல்லது யமனேயோ? திக்குபாலர்களில் நீயார்? யார் நீ? எதற்காகவந்தாய்? யாருனை விடுத்தவர்? நீ யாராயிருந்தாலும் சரி! பயமில்லாமல் சொல்" என்று கேட்கிறான் இராவணன்.

"நீ சொன்னயாரும் நான் இல்லை. நீ சொன்ன அந்த பலமற்றவர்களின் தூதனுமில்லை. சாதாரணமான வில்லை யுடைய ஒருவனுடைய தூதன் நான். மும்மூர்த்திகளும் நினைக்கக் கூடாதகாரியத்தைச் செய்து முடிக்கக் கூடியவன். ராவணா! நீ செய்த தவம், உன் பலம் யாவற்றையும் எம் இராமன் ஒருபாணத்தை எடுத்து நீட்டினால் அழித்து விடும். எம்தலைவன் தேவனில்லை. வேறு யாருமிலலை. எட்டு திக்குப் பாலகனும் இல்லை. திக்கிலுள்ள யானையும் இல்லை. ஏன், நீ வணங்கும் பரமேஸ்வரன் கூட இல்லை, உலகத்தையாளும் ஒரு சாதாரண அரசனின் மகன்.

தேவரும் பிறரும் அல்லன்: திசைக்களிறல்லன்; [திக்கில்
காவலர் அல்லன்: ஈசன்கையிலையங்கிரியும் அல்லன்
மூவரும் அல்லன்: மற்றைமுனிவரும் அல்லன்: [எல்லைப்
பூவலயத்தை யாண்டபுரவலன் புதல்வன் போலாம்.

வேதத்திலும் தருமத்திலும் பேசப்பட்ட அப்பெரி யோன் என்ன நினைந்தாலும் நடைபெறும். ஆதிமூலமே என்று யானை அழைத்தவுடன் ஓடிவந்து முதலையிடமிருந்து காப்பாற்றிய பெரியோன் அவன். ஆதி அந்தம் நடுவில்லா தவன். கையில் வில்லேந்தி எங்கிருந்து வந்தான் தெரியுமா? கைலையிலிருந்த பெரியோன் தன் சூலாயுதத்

தைக் கீழே வைத்து இறங்கி வந்தான். ஆலிலையில் படுத்திருந்த பெரியோன் தன் கையிலிருந்த சங்கு சக்கரங்களைக் கீழே வைத்து இறங்கி வந்தான். தாமரையில் வாழ்ந்த ஒரு பெரியோன் கையிலிருந்த கமண்டலத்தைக் கீழே வைத்து இறங்கி வந்தான். மூவரும் சந்தித்தனர். மூவரையும் காணோம்! ஒருவனே நின்றான்! அவன் கையில் வில்லிருந்தது. அவன்தான் இராமன்.

மூலமும் நடுவும் ஈறும் இல்லாதோர் மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்தகாரணன் கைவில் ஏந்தி:
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்ட
[யோத்தி வந்தான்

என்று கூறுவதன் மூலம் மும்மூர்த்திகளும் சேர்ந்த மூலாதாரமான ஒரு மூர்த்தி இராமன் என்று கூறி விடுகிறான்.

[சமீபத்தில் ஒரு முருக பக்தரின் சொற் பொழிவு கேட்கும் பாக்கியம் எனக்கு கிட்டியது. அவர் முருக என்ற நாமத்திற்குப் பொருள் கூறவந்து "ஓம்" என்ற பிரணவம் தான் முருக என்னும் தமிழ்ப் பெயராயிற்று. பெரியோர்கள் மந்திரங்களை மறைவாக வைப்பார். அதுமாதிரி பிரணவம் 'முருக' என்ற எழுத்தில் வைக்கப்பட்டது. அகார உகார மகாரங்கள் "ஓம்" என்றாயின, அதைத்தலை கீழாக வைத்து 'முருக' என்று விட்டனர். மகாரம் 'மு' விலும் உகாரம் 'ரு' விலும், அகாரம் 'க' விலும் அடங்கிவிட்டன என்று கூற எனக்குப் புல்லரித்தது. அதே நிலையில் சமரச மனோபாவமுடைய அப் பெரியார் "முருக" என்பது மூன்று தெய்வங்களின் பெயர் சேர்ந்த நாமம். "மு" என்பது முகுந்தனென திருமாலையும் "ரு"என்பது ருத்ரனென சிவபெருமானையும் "க" என்பது கமலாசனனென பிரமனையும் குறிக்கும் என்றார். இது ஒப்புக் கொள்ளலாமா என்பது வேறு விஷயம். மொத்தத்தில் நம் பெரியோர்களாகிய முன்னோர்கள் ஏதோ ஒரு சமரச மனோபாவமுடையவர் என்பதை எண்ணி எண்ணி மகிழ்ந்

தேன், ஆனால் கம்பன் சரசுவதியின் அருள் பெற்றவன். ஸ்ரீமத் ராமாயணத்தில் சில மாறுதல்கள் ஏன் செய்தாய் என்று யாரோ கேட்டதற்கு "நானும் அறியேன்! அவளும் பொய் சொல்லாள்" என்றானாம். ஆதலால் கம்பன் கூறு வதை நாம் ஒப்புக்கொண்டு மேலே செல்லுவோம்.]

"சாதுக்களைக்காக்கவும், தீமை செய்வோரை அழிக் கவும், தருமத்தை நிலை நாட்டவும் யுகந்தோறும் தோன்று கின்றேன் [கீதை 4—8]

கம்பன் இதையே அனுமான் இராவணனிடம் கூறுவ தாக எழுதுகிறான். "தருமத்தை நிலை நாட்டுவதும்: நல்லோ ரைக்காப்பதும்: அல்லாதவரை அழிப்பதும் தவிர: உலகத்து மக்களின் மீது இரக்கம் கொண்டு வேதமான தாய் கூறிய நன் மொழியை உலகத்தினர் உணரும்படி செய்து நல்வழிப் படுத்தவும் பிறந்தான் இராமன் என்கின்றான் அனுமான்.

*அறந்தலை நிறுத்தி: வேதம் அருள் சுரந்து அறைந்த [நீதித்*
*திறந்தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தி: [தீயோர்*
*இறந்துகநூறி: தக்கோர் இடர்துடைத்தேக ஈண்டு*
*பிறந்தனன்: தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப் [பறுப்பான்.*

தான் பிறந்தானே தவிர தன் நாமத்தைக் கூறுவோரின் பிறப்பை ஒழித்து விடுவான் என்கின்றான்.

"நீ யார்" எனக்கேட்ட இராவணனிடம் தன் தலைவனை இராமபிரானின் பெருமையை விவரமாகக் கூறி "அப்பேர்ப் பட்டவனுடைய அடிமை நான். என் பெயர் அனுமான். சீதா பிராட்டியைத் தேடி நாலாதிக்கும் சென்ற தூதரில் தென் திசை நோக்கிவந்த வாலியின் மகனாகிய அங்கதனின் தூதன். இலங்கைக்குத் தனியாகவே வந்திருக்கின்றேன்' என்கின்றான்.

"வாலி" என்ற பெயரைக் கேட்டவுடன் இராவணன் நடுங்குகிறான். "வாலியின் மகனாகிய அங்கதனின் தூத! வாலி சுகமா? அவன் ராஜ்ஜியம் நன்றாக நடைபெறு கின்றதா?" என்று கேட்க அனுமன் சிரிக்கிறான். "இராவணா! பயப்படாதே! வாலி மேலுலகம் சென்று விட்டான். அவன் திரும்பமாட்டான். நீ நினைத்து நடுங்கும் அந்த வாலும் அவனுடன் போய் விட்டது. இராமபாணம் ஒன்றால் வாலி இறந்து விட்டான்" என்று பரிகசிக்கிறான்.

*அஞ்சலை! அரக்க! பார் விட்டு அந்தரம் அடைந்*
*[தானன்றே*
*வெஞ்சின வாலி மீளான்! வாலும் போய் விளிந்த*
*[தன்றே!*
*அஞ்சன வண்ணன்றன்னின் அடுகணையொன்றால்*
*மாழ்கித்*
*துஞ்சினன் எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல்*
*என்றான்.*

இதை அப்படியே இராவணன் தனக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறான். "குரங்குகளாகிய உங்களுக்குள் எவ்வளவோ வருத்தமிருக்கலாம். ஆனால் பிறன் ஒருவனிடம் காட்டிக் கொடுக்கலாமா? உங்கள் குலத் தவனைக் கொன்ற ஒரு மனிதனுக்கு நீ தூதனாக வந்திருக் கிறாயே? உனக்கு ரோசமில்லை?" என்று கேட்ட இராவண னுக்கு அனுமான் பதில் கூறுகிறான்.

"நான் சுக்ரீவனுடைய பிரதம மந்திரி என்ற முறையில் வந்துள்ளேன். நீ நன்மையென எண்ணிப் பொறுமையுடன் கேட்டால் சொல்லுகிறேன். வாழ்க்கையை வீணாக்கிக் கொண்டுவிட்டாய். ராஜதருமத்தை கவனிக்கவில்லை. காமம் பொல்லாதது. அந்தச் செருக்கிலே மதியிழந்து தான் செய் வதே சரி என எண்ணி வாழமுடியுமா? காமம் மனிதரை யழித்து விடும். பிறர் மனைவியை எண்ணி ஏங்கி உடல் மெலிந்து உலகவர் சிரித்து கேவலம் செய்ய வாழ்வது

ஆண்மையா? ஒருத்தியை வேண்டி அவள் இணங்கமறுத்து வெறுத்துத் தள்ளியபின் வாழும் வாழ்வு ஒரு வாழ்வா? ஆதலால் இராவண! உன் செல்வமும், உன் உயிரும், உனது உற்ருர் உறவினர் உயிரும் உங்களுக்கு வேண்டுமென்ருல் சிதையை இராமனிடம் சேர்த்து விடுவதுதான் நன்மை.

ஆதலாற்றன் அரும் பெறற் செல்வமும்
ஓது பல்கிளையும் உயிரும் பெறச்
சீதையைத்தருகென்றெனச் செப்பினுன்
சோதியான் மகனிற்கெனச் சொல்லினுன்.

இது கேட்ட இராவணன் "ஆஹா! எனக்கு ஒரு குரங்கு புத்தி சொல்கின்றது! பேஷ்! பேஷ்!" எனப்பரிகசித்து அனுமானை நோக்கி "அது இருக்கட்டும்! இவ்வளவு நீதி பேசக்கூடிய நீ என்னிடம் நேராக வரவில்லை. அந்தப்புரத்துள் நுழைந்து அசோகவனத்தையும் அரக்கரையும் ஏன் அழித்தாய்?" எனக் கேட்கிருன்.

"ராவண! உன்னைக் காட்டுவதற்கு எனக்கு யாரும் கிடைக்க வில்லை. ஏதாவது குற்றம் செய்தால் என்னைப் பிடித்து உன்னிடம் கொண்டுவருவார்கள் என எண்ணி அசோகவனத்தை யழித்தேன். உன்னைச் சேர்ந்த அரக்கர்கள் என்னைக் கொல்ல வந்தார்கள். அதனுல்தான் அவர்களைக் கொன்றேன். நான் எதிர் பார்த்தபடியே பிடிபட்டு உன்னையடைந்துள்ளேன்"என்று அலட்சியமாக பதில் கூறும் தன்மை கண்டு "அவனைக் கொல்" எனத்தன் ஆட்களுக்குக் கட்டளையிட "வேண்டாம், நில்" எனத் தடுத்து எழுந்த விபிஷணன் இராவணனை நோக்கி "அண்ணு! இந்திரபட்டத்தை வகிக்கும் நீ தூதனுக வந்தேன் என ஒருவன் கூறியபின்னும் அவனைக் கொல்லப் போகின்ருயா? அண்ணு! பெண் கொலை செய்தவன் உலகில் உண்டு. ஆனுல் தூதனைக் கொலை செய்தது கிடையாது. நம் எதிரிகளான இராமலட்சுமணர்கள் சூர்ப்பனகையைக் கொல்ல முடியாதா? மூக்கு காதுகளை யறுத்து உன் முன்னவரிடம் போய்ச் சொல்

என்று அனுப்பிவிட்டார்கள். இவன் உயிரை வாங்கி விட்டால் இவன் வந்து கண்ணில் கண்டவற்றை அந்த மனிதர்களுக்கு யார் சொல்லுவார்கள்? ஒரு வேளை நம் பெருமையைக் கேள்விப்பட்டால் அம்மனிதர்கள் பயந்து ஓடினாலும் ஓடலாம். இவனைக் கொன்றுவிட்டால் அதற்குச் சந்தர்ப்பமில்லாமலே போய் விடும்" என்று புத்திமதி கூறு கிறான். இது கேட்ட இராவணன் "நல்லது கூறினாய்! இவனு டைய வாலிலே தீவைத்துப் பொசுக்கி வாலில்லாத குரங்காக விரட்டி விடுங்கள்" என்கிறான்.

அனுமான் வாலில் தீவைப்பதற்கு அரக்கர் ஆயத்தம் செய்கின்றனர். அனுமான் மேலும் கயிறுகளால் கட்டப் படுகின்றான். பிரம்மாஸ்திரம் விலகுகிறது. ஆனால் கட்டுப் பட்டமாதிரி அனுமான் பாசாங்கு செய்து அமர்ந்திருக் கின்றான். அனுமானுடைய வாலில் நிறையத் துணிகள் கட்டப்படுகின்றன. அனுமானின் வால் வளருகிறது. துணிகள் வாலில் நிற்பதற்காக நிறையக் கயிறு கொண்டு கட்டுகின் றார்களாம். அரக்கர்கள் எல்லாவிதமான கயிறுகளையும் கட்டு கின்றார்கள். அவரவர் மனைவியின் கழுத்திலுள்ள மங்கல நாண்கயிற்றை நாம் உயிரோடிருக்கும் போதே அறுக்க லாகாது என்று அந்த ஒரு கயிறு தவிர மற்ற கயிறுகளை எல்லாம் அனுமான் வாலில் கட்டுகின்றனர் அரக்கர்.

"பெண்ணிற் கிசையும் மங்கலத்தில்பிணித்த கயிறே
[இடை பிழைத்த:
கண்ணில் கண்டவன் பாசமெல்லாம் இட்டுக்கட்டினார்."

என்கிறான் கம்பன். வாலில் தீவைப்பதற்கு முன்னால் அனு மனை மறுபடி ஒரு தடவை இலங்கை பூராவும் காட்டி அனும னுக்குத் தாங்கள் கொடுக்கும் தண்டனை பற்றி யானை மேல் முரசறைந்து "இந்த நகரத்திற்குள் புகுந்து அசோகவனம், அட்சகுமாரன் முதலானவரையழித்து சீதையோடு பேசி மனிதர்களின் பெருமையை நமது மகாராஜனிடம் பயமில் லாது சொல்லவந்த குரங்கிற்கு ஏற்படும் தண்டனையைக் காண வரலாம்"

அந்த நகரும் கடிகாவும் அழித்து அக்கன்
[முதலாயோர்
சிந்த நூறி: சீதையோடும் பேசி: மனிதர் திறம்
[செப்ப
வந்த குரங்கினுக்கு உற்றதனை வம்மின்! காண! வம்
[என்று
தந்த தெருவும் வாயில் தோறும் யாரும் அறியச்
[சாற்றினர்.

இதைச் சீதாதேவியிடம் கூற அவள் உயிர் பதைத்தாள். வேர்த்தாள்: தவித்தாள்: ஏங்குகிருள். அழுது பெருமூச்சு விட்டு அக்கினி தேவனை வேண்டுகிருள். "தாய் போன்ற கருணையுடைய இராமனின் துணைவனுன அனுமானை நாய் போன்ற அரக்கர் துன்புறுத்த பார்த்தும் அனுமனுக்கு அருள் செய்யமாட்டாயா? நீயே உலகிற்கு சாட்சி. உனக்கே தெரியும். நான் கற்புக் கரசியானுல் அக்னிதேவ! அவனைச் சுடாதே!" என்கிருள்.

தாயேயனைய கருணையான் துணையை: ஏதும்
[தகவில்லா
நாயே யனைய நல்லரக்கர் நலியக் கண்டால்
[நல்காயோ?
நீயே உலகுக்கு ஒரு சான்று: நிற்கே தெரியும்:
[கற்பதனில்
தூயேன் என்னில் எரியே! அவனைச் சுடல் என்ருள்.

கம்பனுடைய சிதை "அனுமானைச் சுடாதே" என்கிருள். வான் மீகரின் சிதை "அனுமானுக்குக் குளிர்ச்சியைச் செய்" என் கின்ருள். அனுமானுக்கு உபகாரம் கூடப் புரியவேண்டாம். துன்பம் செய்யாதிருந்தால் போதும் என்று கம்பனின் சிதை வேண்டினுள் என்பது குறிப்பு.

சிவபெருமானுடைய நெற்றிக் கண் நெருப்புடைய தல்லவா? அது நாரத மகரிஷியின் விணைகானம் கேட்டுக் குளிர்ந்தது என்கிருர் புகழேந்தி.

"நெற்றித் தனிக்கண் நெருப்பைக் குளிர்விக்கும்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்" — நளவெண்பா

அனுமானுடைய வாலைச் சுடாதே என சீதாபிராட்டி அக்னி தேவனை வேண்ட உலகத்திலுள்ள நெருப்பெல்லாம் குளிர்ந்தது என்கின்ருன் கவிஞன். உலகத்திற்கு அக்னியை அளிக்கும் சிவபெருமானுடைய நெற்றிக்கண் குளிர்ந்து விட்டது. பெரியோர்கள் வைத்திருந்த தெய்வீகமான அக்னிகுண்டங்கள் குளிர்ந்துவிட்டன. நரகத்திலிருந்த பெரு நெருப்புக் கூடக் குளிர்ந்து விட்டது. "மாற்ருனுடைய மனை வியைத் தனக்கு மனைவியாக வேண்டு மென்ற கெட்ட எண்ணங்கொண்ட இராவணன் வீட்டில் மாத்திரம் நெருப்பு எரிந்தது" என்கின்ருன் கவிஞன். தனது மேனி மீது ஜ்வாலை வீசுகிறது. வாலில் தீ நன்ருகப் பற்றிவிட்டது. ஆனுல் சூடே இல்லை. குளிருகிறது. இது கண்ட அனுமான் "என் அம்மை யின் கற்பினுல் இப்படியாகிவிட்டது"என மகிழ்ச்சி கொள்ளு கிருன்.

வெற்பினுல் இயன்றதென்ன மேனியை விழுங்கி
[வெந்தீ
நிற்பினும் சுடாது நின்ற நீர்மையை நினைவின்
[நோக்கி
அற்பினர் அருத சிந்தை யனுமானும் ஜனகன்பாவை
கற்பினுலியன்றதென்பான் பெரிய தோர் களிப்
[பஞனன்

அந்நிலையில் அந்த வாலை இலங்கையின் மீதே விட்டுவிடு கிருன் அனுமான். இராவணனுடைய கொடியை பற்றிப்பின் வீட்டின் மேற்கட்டிகளில் பிடித்துக் கொண்டு வீடு தோறும்

பற்றிக்கொண்டது நெருப்பு. எங்கும் பார்த்தாலும் புகை மண்டியதால் எங்கு செல்வதென்று அறியாது தவித்தனர் அரக்கர் மாதர். யானைகள் தீப்பிடித்து வெந்து தோல் கழன்று வெள்ளை யானையான ஐராவதம் மாதிரி விட்டன. தங்கள் நாயகரை இழந்த சிலகற்புக்கரசிகள் அந்த நெருப்பில் விழுந்து மடிந்து விட்டனர். நெருப்புக்குப்பயந்த சிலபறவைகள் கதறிக்கொண்டு நீர் நிறைந்த கடலில் விழ, தம்மை வந்தடைந்தவரைக் காப்பதற்கு பதிலாக, அங்குள்ள மீன்கள், அப்பறவைகளைக் கடித்துத் தின்னலாயின. இராவணன் அரண்மனையிலும் தீப்பிடிக்கின்றது. "என்ன இது" என இராவணன் கேட்க "குரங்கு இந் நாட்டைச் சுட்டுவிட்டது" என வேலையாட்கள் கூறுகின்றனர், "அடேய்! நாட்டைச் சாப்பிடும் நெருப்பைப் பார்த்தவர்கள் பார்த்த இடத்திலே அணையுங்கள். ஓடிப் போவதற்கு முன்னால் படித்த குரங்கைப் பிடித்து வாருங்கள்" என்கிறான்.

உண்ட நெருப்பைக் | உற்றகலாமுன்
கண்டனர் பற்றிக் | கற்றகுரங்கைப்
கொண்டணை கென்றான் | பற்றுமினென்றான்
அண்டரை வென்றான் | முற்றுமுனிந்தான்.

இது கேட்டு "பிடி! பிடி! அடி! அடி!" என ஓடி வந்த அரக்கர்களைத் தன் வாலில் கட்டி ஒரு தடவை பம்பரம் மாதிரி சுற்றித் தரையோடு அடித்துக்கொன்று விடுகிறான் அனுமான். பின்னர் இலங்கை பூராவும் தீ மூண்டுவிட்டது என்று அறிந்துகொண்ட அனுமான், ஊருக்கு வெளியில் சென்று தன் வாலைச் சமுத்திரத்தில் நனையவிட்டுச் சாவகாசமாக யோசிக்கிறான். "இலங்கை பூராவும் வெந்து போயிருக்கும்" என மகிழ்ச்சியுடன் எண்ணிய அனுமான் திடீரென்று ஏதோ இடி விழுந்தமாதிரி "ஐயோ! ஐயோ! என்னகாரியம் செய்துவிட்டேன்! கணையாழி கொடுத்தேன். என் அன்னையைக் களிப்பூட்டினேன். பின் சூளாமணி பெற்றேன். ஆனால் சுட்டெறிந்து விட்டேனே! அம்மை இலங்கையுள் சிறை

யிருக்கின்ருள் என்பதை மறந்து ஊரில் திவைத்து விட்டேனே! அந்தோ! என் மந்த புத்தியை என்ன வென்று சொல்வது" என நொந்து கொள்ளும் போது திடீரென்று அங்கு இரண்டு அரக்கர்கள் "ஆஹா! என்ன அதிசயம்! இலங்கை பூராவும் பிடித்த தீ இலங்கையில் உள்ள அசோக வனத்தில் உள்ள சீதாபிராட்டியை மட்டும் ஒன்றும் செய்ய வில்லை." என்று பேசிக் கொள்வதைக் கேட்ட அனுமான் "ஸ்ரீ ராமஜெயம்" என்று ஒருதாவு தாவிக் குதிக்கிருன். ஆம்! அசோகவனத்தில் சீதாபிராட்டியின் எதிரில்தான். பார்த்த அம்மையார் துயரத்திருல் எறிந்த மேனி குளிருகிறது. "எனது நன்றி (வார்த்தை என் வந்தனே!)" என்று "மறுபடி பேசுவதற்கு வந்து விட்டாயா(வார்த்தையேன்? வந்தனே)" என இருச் சொல்லாகக் கேழ்வி கேட்க அனுமான் தேவியார் சுகமாக இருப்பது கண்டு மகிழ்ச்சியுடன் அவ்விடத்தை விட்டு ஒரேதாவலாகத் தாவுகிருன்.

பார்த்தனள் சானகி: பாரா
வேர்த்து எரி மேனி குளிர்த்தாள்
வார்த்தை யென் வந்தனே என்னுப்
போர் தொழில் மாருதி போனன்.

மறுபடி அரக்கரிடம் அகப்பட்டுக் கொண்டால் விண்தாமத மாகும் என்று எண்ணி ஒரே தாவலாகத் தாவி எதிர்க்கரை யிலுள்ள அங்கதன் முதலானவர்கள் எதிரில் குதிக்கிருன். அங்கதன் முதலானவர் ஆரவாரத்துடன் எதிர் கொண்டு அழைக்கின்றனர்.

## 10. கண்டேன் தேவியை!

அனுமனுக்கு அக்கரையில் அமோக வரவேற்பு! சிலர் அனுமனைத் தூக்கிச் சுமக்கின்றனர்! சிலர் முழுதும் அள்ளி விழுங்கி விடுவார் போல மொய்த்தனர். சிலர் காய் கனி கிழங்குகள் கொடுத்து உபசரிக்கின்றனர். அனுமான் முதன் முதலாக அங்கதனை வணங்குகிருன் ஏன்? சிறியவரைப்

பெரியவர் வணங்கலாமா? அங்கதன் சிறு குழந்தையா யிருந்த போதிலும் அரசகுமாரன்.

"திருவுடை மன்னரைக் கண்டால் திருமாலைக்கண்டேன்"

என்ற வழக்கின்படி அனுமான் அங்கதனை அவனுடைய ஸ்தானத்திற்காக வணக்கம் செலுத்துகின்ருன். பின்னர் வயது முதிர்ந்த ஜாம்பவானைக் காலில் விழுந்து வணங்குகிருன். மற்றபடி வயதில் சிறியவர்களுக்கு ஆசி கூறி, பெரியோர்களுக்கு நமஸ்காரம் செய்து "அங்கிருந்து இங்கிருக்கும் அனைவருக்கும் சீதாபிராட்டியார் நன்மையே கூறினுள்" என்கிருன். இது கேட்ட வானரவீரர்கள் போய் வந்த விபரம் பூராவும் கூறும்படி நிர்ப்பந்திக்கின்றனர். அவர்களுக்கு இணங்கிய அனுமான் சீதாபிராட்டி சிறை யிருந்த செல்வியாக விளங்கிய தவக்கோலத்தை அழ கொழுகக்கூறி, அடையாளம் கொடுத்து பதில் அடையாளம் பெற்றதும் கூறுகின்ருன். தன் வாயினுல் தன் வெற்றியைக் கூற வெட்கமடைந்து அவ்விலங்கையில் போரிட்டதையும் தீயிட்டதையும் கூற வில்லையாம். இவைகளைக் கேட்ட ஜாம்பவான் "மாருதி! நீ சண்டையிட்டாய் என்பதை உன் உடலிலுள்ள புண்கள் காட்டுகின்றன. நீ திரும்பிவந்ததில், நீ புறமுதுகு காட்டாத வீரன் என்று எனக்குத் தெரியுமா கையால், நீ வெற்றிபெற்று விட்டாய் என்பது தெரிந்து விட்டது. இவ்வளவு சண்டையிட்டும் பிராட்டியார் வராத திலிருந்து பகைவர் இன்னும் பலமுடையவராயிருக்கின்றனர் என்றும்அறிகிறேன். இங்கிருந்துபார்த்தால் அங்கேதெரியும் பெரும் புகையைக் கண்டால் நீ அவ்வூரில் பெருந் தீமூட்டி யுள்ளாய் என்று தெரிகின்றது. மாருதி! நீ பெரும் பாக்கிய சாலி. இராமகாரியத்தைச் செவ்வையாகச் செய்து முடித்து விட்டாய்." என்று போற்றிப் புகழ்கின்ருன்.

பொருதமை புண்ணே சொல்ல: வென்றமை போந்த [தன்மை
உரை செய ஊர்தீயிட்ட ஓங்கிரும் புகையே ஓத:
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே [காட்டத்
தெரிதர உணர்ந்தேம்: பின்னர் என் இனிச் செய்தும் [என்ருன்.

இது கேட்ட அனுமான் "என்னைப் புகழ்வதிருக்கட்டும். தேவி நீங்கிட ஆவி நீங்கியது போல் அவலமடைந்

திருக்கும் இராமபிரானைக் காணப் போகலாம்" எனப் புறப்படுகின்றான். போகும் வழியில் மதுவனம்என்ற ஒரு இடம். மது வருந்த வேண்டுமென்று வானரவீரர் அங்கதனுடைய அனுமதிபெற்று மதுவனத்தில்சந்தோஷம் மீறி அட்டகாசம் செய்கின்றார்கள். அந்நிலையில் மதுவனத் திற்குக் காவலாயிருக்கும் சுக்கிரீவனின் தாய் மாமனான ததிமுகன் என்பான் குரங்குகளை அடிக்க, அதன் காரணமாக ததிமுகனுக்கும் அங்கதனுக்கும் மோதல் ஏற்படுகின்றது. அங்கதன் மீது ததிமுகன் ஒருபெரிய கற் பாறையைத் தூக்கி எறிய அதனைப் புறங்கையால் அகற்றி அங்கதன் ததிமுகன் மூக்கிலும் வாயிலும் இரத்தம் வடியும் படி அடிக்கிறான். அடி வாங்கி ரத்தக்காயத்துடன் ததிமுகன் இராமபிரானை நோக்கி வருகிறான்.

மற்ற மூன்று திசைகளிலும் சென்ற வானரர் திரும்பி வந்து சீதையைக் காணவில்லை என்று கூற, தென்திசை சென்ற அனுமான் வரவில்லையே என இராமபிரான் எண்ணு கின்றான். "சீதை தென்திசையில் எங்கே யாவது மாண்டு விட்டாளோ! அவள் மாண்டவார்த்தையை மீண்டும்சென்று என்னிடம் கூறி துக்கப்படுத்த வேண்டாமென்று அங்கேயே இருந்து விட்டார்களோ? அல்லது இன்னும் சீதையைத் தேடிக் கொண்டிருக்கின்றார்களோ? அல்லது அரக்கரைக் கண்டு கோபமிகுந்து சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றார் களோ? சண்டையில் மாண்டுவிட்டார்களோ? சிறைப் படுத்தப்பட்டு விட்டார்களோ?" என்று எண்ணி எண்ணி வருந்திக் கொண்டிருக்கின்றான். பெருமான் பக்கத்தில் சுக்ரீவன், லட்சுமணன் முதலானவர் நின்று கொண்டு ஆறுதல் கூறும் போது "மருமகனே" என்று அலறிக் கொண்டு வாயிலும் மூக்கிலும் ரத்தம் கக்கிக் கொண்டு தோன்றுகிறான் ததிமுகன். "மாமா! என்ன இப்படி" என்று கேட்ட சுக்ரீவனுக்கு ததிமுகன் "அங்கதன் முதலானவர் நம் மதுவனத்தையழித்தனர். தடுத்தேன். என் முகத்தில் ரத்தம் வரும்படி அங்கதன் அடித்தான்" என்று அலறு கின்றான். உடனே சுக்ரீவன் திடீர் என்று எழுந்து இராமனின் பாதாரவிந்தங்களில் விழுந்து வணங்கி 'சீதாபிராட்டியார் சுகமாயிருக்கின்றார் என்ற உண்மையை என் மாமன் மூக்கி லிருந்து வரும் ரத்தம் கூறுகின்றது" என்கிறான்.

*ஏம்பலோடு எழுந்து நின்று இரவி கான்முளை*
*பாம்பணையமலனை வணங்கிப்: பைந்தொடி*

மேம்படு கற்பினள் என்னும் மெய்ம்மையைத்
தான் புகன்றிட்ட திச்சல மென்றேதினன்-

"அவர்கள் ஐயம் பெற்றுக் களிவெறி கொண்டு ஏதோ விளையாட, ததிமுகன் அதையறியாமல் அவர்களிடம் தன் அதிகாரத்தைக் காட்ட அங்கதன் இவனை இவ்வாறுபரிபவம் செய்திருக்கிறன்" என்று இராமபிரானிடம் கூறி "மாமா! அங்கதன் குழந்தை. அவனுடைய அரசு இது. அவனுக்குத் தான் முழு அதிகாரம். நீ திரும்பிப் போய் அவனிடம் மன்னிப்பு பெற்றுக்கொள்" எனத் திருப்பி யனுப்புகின்றன். ததிமுகன் வேறுவழியில்லாமல் திரும்பி அங்கதனிடம் வருகின்றன். அவ்வாறு வரும் ததிமுகனைக் கண்ட அங்கதன் மீண்டும் போருக்கு வருகின்றன் என எண்ணிக் குரங்குகளை ஏவ, ததிமுகன் அவனைவணங்கி மன்னிப்புக் கோருகின்றன். இவற்றையெல்லாம் அனுமானல் ரசிக்க முடியவில்லை. இராமபிரரனின் துயரத்தை நீக்குவதற்காக வெகு வேகமாக இராமபிரான் இருக்குமிடம் நோக்கிவருகின்றன். அவ்வாறு இராமபிரானிடம் வந்த அனுமான் அப்பெருமானை வணங்கவில்லை. தென்திசை நோக்கிச் சிரமேற்கரங்குவித்து சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கிறன். இதுகண்டஇராமபிரான் "தென்திசையில் அனுமான் சீதையைக் கண்டு விட்டான் போலும்! அவள் சுகமாக, நவவியாகரண பண்டிதனுகிய தன்னுலும் வணங்கத்தக்க கற்புடையவளாயிருக்கிருள் என்பதை அனுமன் வணங்கியே காட்டிவிட்டான்" என்று குறிப்பினுல் உணர்ந்து கொள்ளுகின்றன்.

திண்திறல் அவன் செயல் தெரிய நோக்கினன்:
வண்டுறை ஓதியும் வலியள்: மற்றிவன்
கண்டதும் உண்டு: அவள் கற்பும் நன்று: எனக்
கொண்டனன் குறிப்பினுல் உணரும் கொள்கையான்.

சீதா பிராட்டியிருந்த திசை நோக்கி வணங்கி எழுந்த அனுமான் "சீதையைக் கண்டாயா?" என்று இராமன் கேட்பதற்கு முன்னுல் அப்பெருமானின் ஆவலைத் தணிப்பது போல் "கண்டனன்" என்று கூறத் தொடங்குகின்றன். "கண்டேன் சீதையை" என்று கூறினுல் சீதை கற்புடனிருக்கின்றளா என ஐயம் ஏற்படலாம் என்ற எண்ணத்தில் "கண்டனன் கற்பினுக்கு அணியை" என்று கூறி "என் கண்களால் கண்டேன்" எனவும் "அவ்வம்மையின் கண்களை உற்று நோக்கினேன். பரிசுத்தவதியின் கண்கள்" என்று கூறுவது போல் "கண்டனன் . கற்பினுக்கு அணியைக் கண்களால்" என்றும் கூறி "பெருமானே! இலங்கையில்

அம்மையைக் கண்டேன். தங்கள் துயரத்தை விட்டு விடுங்கள்" என்று கூறுகின்றான். இராமபிரானுடைய ஆவலைத் தணிக்கும் முறையில் அனுமான் கூறிய பொருள் பொதிந்த பாடல் இதோ!

கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்:
தெண்டிரை அலைகடல் இலங்கைத் தென்னகர்:
அண்ட நாயக! இனித்தவிர் தி ஐயமும்
பண்டுள துயருமென்று அனுமன் பன்னுவான்

'பிரபு! தங்களது தேவி என்ற உரிமையால் 'அரக்கன் வீட்டில் இராமபிரானின் பத்தினி கற்புநெறி தவறு திருந்தாள்' என்று உலகம் பேசும்படி செய்து உங்களுக்கு பெருமையைக் கொண்டு வந்தாள். இப்படிபபட்ட உத்தமி தசரதரின் மருமகள் என்றதால் அவருக்குப் பெருமையும் ஜனகரின் மகள் என்பதால் அவருக்கு கௌரவத்தையும், உண்டாக்கி என் அன்னையான அவள் எனக்கு ஒரு தெய்வம் என்று வணங்கும் பெருமையையும் அளித்து விட்டாள். இரகுபுங்கவ! பொன்னுக்குப் பொன்தான் சமம். அதே கற்பு நிலையில் தனக்குத்தானே சமம் என்றும் தன்னை மனைவியாக அடைந்த தங்களுக்குத் தாங்களே நிகர் என்று இப்பேர்பட்ட அன்யோன்யதம்பதிகளுக்குச் சேவை செய்யும் பெரும்பேறு எனக்குக் கிடைத்ததால் என்னைக் காட்டிலும் பாக்கியவான் இல்லை என்ற நிலையை ஏற்படுத்தி விட்டாள். இறைவனே! இலங்கையில் சிறையிருந்த செல்வியான ஒரு பெண்ணையா கண்டேன்? இல்லை! இல்லை! நல்ல குலத்தில் பிறந்த ஒரு பெருமையும் பொறுமையும், கற்பும் ஆகியவை நடனமாடக் கூடிய குணசௌந்தரியத்தைக் கண்டேனே தவிர கேவலம் ஒரு எலும்பிலும் தோலிலும் ஆன ஒரு பெண்ணின் தேகசௌந்தரியத்தைக் காணவில்லை!

விற்பெருந்தடந் தோள்வீர! வீங்குநீர் இலங்கை
[வெற்பில்
நற்பெருந்தவத்தளாய நங்கையைக் கண்டேனல்
[லேன்!
இல் பிறப் பென்ப தொன்றும்: இரும் பொறை என்ப
[தொன்றும்
கற் பெனும் பெயரதொன்றும் களி நடம் புரியக்
[கண்டேன்.

பெருமானே! சிறையிருந்த செல்வியாம் பிராட்டியார் எங்கு திரும்பினும் தங்களையே காண்கிறார். எப்போதும் அவள்

நாவில் தங்கள் மந்திர உச்சாடனந்தான். விரகதாபத்தால் உண்டாகும் புண்ணிலும் தங்கள் திருவுருவமே என்றால் தங்களைப் பிரிந்தாள் எனபது எங்ஙனம் பொருந்தும்? தங்க மயமான மரங்கள் நிறைந்து பகலிரவு தெரியாது அந்த மரங்களின் ஒளி எப்போதும் பிரகாசித்து விளங்கும் அந்தக் கற்பகச் சோலையில் தங்களது தம்பியால் வனையப்பட்ட பரிசுத்தமான பர்ணசாலையிலே அம்மை யிருக்கின்றாள். 'பரிசுத்தமான பர்ணசாலை' என்பதன் மூலம் அவள் இருக்கும் அந்தப்பர்ணசாலையே தூய்மையுள்ளதாயிருக்க அவளு டைய தூய்மையை சந்தேகிக்க வேண்டாம் எனக் கூறும அனுமான் சிதாபிராட்டியை தவஞ் செய்த தவத்தின் உருவம் என்றும் கூறி மேலும் அவளுடைய தூய்மையை நன்றாக விளக்கி விடுகின்றான்.

> வேலையுள் இலங்கையென்னும் விரிநகர் ஒரு சார் [விண்தோய்
> காலையும் மாலைதானும் இல்லதோர் கனகக்கற்பச்
> சோலையங்கதனில் உம்பி புல்லினால் தொடுத்ததூய
> சாலையுள்ளிருந்தாள் ஐய! தவஞ் செய்த தவமாம் [தையல்!

இலங்கை முழுதும் தேடி சிதாபிராட்டியை அசோக வனத்தில் கண்ணீர்க் கடலில் கண்டேன். இரக்கமென்பது ஒரு பெண் வடிவு கொண்டு அரக்கர் நடுவில் இருந்தாகவே கண்டேன், கற்புக்கரசியான ஒரு நல்லாளை மணந்து அவளு டைய பக்திக்கு நீர் பாத்திரன் ஆனதால் ஆண்மகனாகப் பிறந்ததனால் அடைந்த பாக்கியத்தைப் பூரணமாக அடைந் துள்ளீர்கள். பிரபுவே! நான் பிராட்டியை அசோகவனத்தில் கண்ட அன்று இராவணன் அங்கு தோன்றி பிராட்டியாரிடம் எவ்வளவோ கேட்டும் பயனில்லாது அவளைக் கொல்வது என்று கோபம் கொண்டுவிட்டான். தங்களது அருளும் அம்மையின் கற்பும் காத்ததால் அரக்கிகளிடம் எப்படி யாவது சிதாபிராட்டியை வசியப் படுத்து வீர்களாக எனக் கூறிப் போய்விட்டான். அந்நிலையில் வருத்தமடைந்த பிராட்டியார் தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்த காலத்தில் அடியேன் எதிரில் தோன்றித் திருவடி வணங் கினேன். ஒரு வேளை அரக்கர் மாயமோ என்று எண்ணினாள் போலும்! பின்னர் அடையாளங்கள் கூறிக் கணையாழி தந்தேன். மிக மிக மகிழ்ச்சி கொண்டாள். பிரபுவே! ஒரே க்ஷணத்தில் இரண்டு கண்டேன். கணையாழியை மார்பில் வைத்துக் கொண்டாள். தங்கள் மீதுள்ள விரகதாபத்தினால்

உடலில் ஒரு விதமான சூடுஏற்பட்டுக் கணையாழி உருகி விட்டது. அதே கணத்தில தங்கள் கருணையை எண்ணி மகிழ்ச்சியால் உள்ளம்குளிரக் கணையாழி குளிர்ந்து கட்டியாக நின்றது.

ஒரு கணத்திரண்டு கண்டேன்: ஒளிமணியாழி
[ஆன்ற
திருமுலைத்தடத்து வைத்தாள்: வைத்தலும், செல்வ!
[நின்பால்
விரகமென்பதனின் வந்த வெங் கொழுந் தீயினால்
[வெந்து
உருகியது: உடனே ஆறிவலித்தது குளிர்ப்புள்ளூற.

தருமமூர்த்தியான இராமபிரானின் திருக்கையை அலங்காரம் செய்ய பாக்கியம் பெற்ற கணையாழியே! பாபியான இராவணன் ஊருக்கு வந்து தீட்டுப்பட்டாயே!" என எண்ணிய சீதாபிராட்டி தன் கண்ணீரால் ஆயிரங்கலசம் அபிஷேகம் செய்து கணையாழியைத் தூய்மை செய்தாள். இராவணன் பிரமனின் பேரன்: பிராமணன்: எனினும் அவன் ஒழுக்கங் குறைந்து விட்டான். அவனைச் சேர்ந்தால் பரிசுத்தம் குறையும் என்பது கம்பனின் குறிப்பு.

வாங்கிய ஆழிதன்னை வஞ்சரூர் வந்ததா மென்று
ஆங்குயர் மழைக்கண்ணீரால் ஆயிரம் கலசமாட்டி
ஏங்கினள்! வியந்ததல்லால், இயம்பலள்: எய்த்த
[மேனி
வீங்கினள்! வியந்ததல்லால் இமைத்திலள் உயிர்ப்பு
[விண்டாள்.

இறைவனே! பின்னர் தாங்கள் தேவியைப் பிரிந்தபின் பட்ட துயரங்களை எல்லாம் கூறினேன். தாங்கள் அம்மையார் சிறையிருக்கும் இடம் தெரியாததால் வரத்தாமதமாயிற்று என்று கூறினேன். அம்மையார் இங்குள தன்மை எல்லாம் என்னிடம் கேட்டுக் கொண்டாள். அங்குள்ள தன்மை எல்லாம் என்னிடம் கூறி ஒருமாதத்தில் தாங்கள் வரவில்லை என்றால் உயிர் விட்டு விடுவேன் என்று தங்கள் பாதத்தின் மீது ஆணை வைத்தாள். ஆணைவைத்தபின் துகிலில் மறைத்து வைந்திருந்த சூடாமணியை என்னிடம் கொடுத்தாள். அதனைத்தங்கள் கண்ணாரக்காண வேணும்" என்று அனுமான், உலகமழிந்தாலும் அழியாத பெருமையுள்ள பெருமான், இராமபிரான் திருக்கரத்தில் கொடுத்து நின்றான்.

வைத்த பின் துகிலின் வைத்த மாமணிக்கரசை
[வாங்கிக்

கைத்தலத்தினிதினீந்தாள் தாமரைக் கண்களார
வித்தக! காண்டி என்று கொடுத்தனன்: வேத
நன்னூல்
உய்த்துள காலமெல்லாம் புகழொடு ஒக்க நிற்பான்.

சூடாமணி பெற்ற இராமபிரானின் மனம் மெள்ள மெள்ளக் கரைந்து சிதாபிராட்டியின் மீதுள்ள அன்பு பொங்கியது. இராமபிரான் துயரம் நீங்கினன். இராமபிரானுக்கு அந்தச் சூடாமணியானது திருக்கல்யாணத்தன்று அக்கினிக்கு முன்னுல் பற்றிய பிராட்டியின் திருக்கரம் போலாகி ஆனந்த மடைந்தான். சுருங்கக் கூறின் இராமபிரான் பிராட்டியாரைத் திருமணம் செய்து கொண்ட அன்று அடைந்த களிப்பை யடைந்தான் என்கிருர்.

பைப்பயப் பயந்த காமம் பரிணமித்துயிர்த்துப்
[பொங்கி
மெய்யுற வெதும்பி: உள்ளம் மெலிவுறு நிலையை
[விட்டான்:
ஐயனுக்கு அங்கி முன்னர் அங்கையால் பற்றும்
[நங்கை
கையெனலாயிற்றன்றே கைபுக்க மணியின் காட்சி

இம்மாதிரி இராமபிரான் களிப்படைந்தான் என்ற மங்கல மொழியுடன் முடிவதால்தான் சுந்தரகாண்டம் படித் தோருக்கு சகல நன்மைகளும் உண்டாகும் எனப் பெரியோர் கூறுவர். அவ்வாறே இச்சுந்தரகாண்டம் படித்த வாசகர்கள் நன்மையெல்லாம் பெற்று என்றும் திடகாத்திரத்துடன் வாழ ஸ்ரீ சிதாராமர்களின் திருவடி வணங்குகின்ருேம்.

பின்னர் அனைவரும் தென்சமுத்திரக் கரையடைந்து, சேது கட்டி, இலங்கை புகுந்து போர் தொடுத்து, அறத் தினைத் தின்றபாவியாம் இராவணனையழித்து, சிதாராமர்கள் அயோத்தி திருப்பி முடிசூடி நீடுழி காலம் வாழ்ந்து பக்தர் கட்கு அருள் புரிகின்றனர் எனக் கவிசக்காவர்த்தி தன் காவியத்தை முடித்துப் புகழுடன் இப்பூவுலகில் வாழு கின்ருன். ஸ்ரீ ராம ஜயம்.

ஸ்ரீராமகதா சாகரம் சுந்தரகாண்டம் முற்றிற்று,
ஸ்ரீகம்ப நாட்டாழ்வார் திருவடிகளே சரணம்,
ஸ்ரீ சீதாராமர் துணை.

—:மங்களம்:—

## ஸ்ரீ சீதாராம பட்டாபிஷேகம்.

மாணிக்கப்பலகை தைத்து வயிரத்தில் கால்கள்
[சேர்த்தி
ஆணிப்பொன் சுற்றி முச்சி அழகுறச்சமைத்த பீடம்
ஏணுற்ற பளிக்கு மாடத்திட்டனர் அதனின் மீது
சேணுற்றதிரள் தோள் மன்னன் திருவொடு பொலிந்
[தான் மன்னோ.

அரியணையனுமன்றாங்க: அங்கதனுடைவாள் ஏந்த;
பரதன் வெண் குடைகவிக்க: இருவரும் கவரிவீச
விரை செறிகுழலி யோங்க, வெண்ணெயூர் சடையன்
[றங்கள்
மரபுளோர் கொடுக்கவாங்கி வசிட்டனே புனைந்தான்
[மௌலி.

நாடிய பொருள் கைகூடும் ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல் வழியதாக்கும் வேரியங்கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை
சூடிய சிலையிராமன் தோள்வலி கூறுவார்க்கே.

நன்மையுஞ் செல்வமும் நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சன்மமு மரணமுமின்றித் தீருமே
இம்மையே ராமவென்றி ரண்டெழுத்தினால்.

ஸ்ரீசீதாராமர் திருவடிகளே சரணம்
ஸ்ரீகம்ப நாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.
ஸ்ரீ ஆஞ்சனேயர் துணை.

—:மங்களம்:—



அச்சிட்டோர்: செந்தமிழ்ப் பதிப்பகம், புதுக்கோட்டை.

